சிவமயம

ஸ்ரீஞானசம்பந்தகுரவேநம:

---

# சென்னை ஸ்ரீகமலவல்லிநாயகர்

## ஸ்தௌத்யாஷ்டகம்



இஃது

குன்றத்தூர்-மாணிக்கமுதலியாரால்

இயற்றி

அவரது நண்பராகிய

ம-௱-௱ஸ்ரீ

மணவூர்-முனிசாமிமுதலியாரால்

---

களத்தூர்முத்துசாமிமுதலியாரவர்களது

புதுசனவிநோதினி

அச்சுக்கூடத்தில்பதிப்பிக்கப்பட்டது

விக்கிரம௵-பங்குனிமீ ௰௩-உ

பிணிபடுஜனனககடலுக்கோர்பெரு
பேசறுநற்புணையே
பிழைபலவாற்றிடினுந்தமியேனைப்
பெருமானேயாள்வாய்
அணிமிகவோங்குவிழாவணமங்கல
மானுசென்னையில்வாழ்
அமலவிலான்மகிழ்விமலமுனீன்றருள்
கமலவிநாயகனே. (க)

வேதபுராணமுதற்பலநூல்கள்
விளம்பிடுமெய்ப்பொருளே
மெய்யுறுமன்புடையார்க்கவாதமமிலு
மிககன்புள்ளோனே
கோதறுதேவரின்முன்வழிபாட்டைக்
கொள்ளும்பெரியோனே
கூறியபாரதமன்றசலததே
கோட்டின்வரைந்தோனே
பூதலமேத்துறுமௌவையையேழும்
போயபரிசும்முன்னே
போயடையுமபடிவேதண்டத்தைப்
புரியுந்திண்ணியனே
ஆதரமிக்கவனையேசரணுற்றேனை
ஆள்வாய்சென்னையில்வாழ்
அமலவிலான்மகிழ விமலமுனீன்றருள் (உ
கமலவிநாயகனே.

## ஸ்தௌத்யாஷ்டகம்.

விக்னேச்சுரனென்றே
மேதகுஞாலமியம்புமெனக்கோ
மேன்மேலுமபலவாம்
மிககஞாற்றுறுதீங்கேயென்றும்
விளைந்திடுமேதுவினல்
ஓதுமதற்கொருமாறுபொருட்கோள்
உண்டோவென்றயிர்ப்பேன்
உத்தமவையுறுவேற்கிஃதின்னே
யுள்ளபடிக்கருள்வாய்
ஆதுலரெங்கெனநேடியுமன்னம்
அளிக்குஞ்சென்னையில்வாழ
அமலைவிலான்மகிழவிமலைமுனிவன்றருள்
கமலைவிநாயகனே (௧)
மண்ணிலவாழ்வொழிநின்னிருதாளும
வணங்கேன்கணைகளினீர
வாரமிகுந்தபணிப்புறமெய்தான்
வாயுங்குழறிடவே
உண்ணிகழ்நெஞ்சழல்சேர்மெழுகைப்போல்
உருகப்பரவசனாய்
உம்பரிடுக்கணகற்றிடவந்தரு
ளோங்கன்முகத்தரசே
பண்ணவர்முப்பொழுதுந்தொழுதேத்திடு
பாதசரோருகனே
பாங்கினருண்முகிலேயெனநின்றே
பாடேனாடுகிலேன்

# ஸ்ரீகமலைவிநாயகர்.

ஆவேன்சென்னையில்வாழ்
அமலைவிலான்மகிழவிமலைமுனீன்றருள்
கமலைவிநாயகனே (௭

காயமுறும்பிணியொன்றுமிலாது
களிப்பொடுநென்னலுளார்
காசினியின்றுயிர்நீங்கவுமந்தோ
காணுபுமிககவெரீஇ
நேயமிகுந்தனுமொகுளைதைப்போல்
நிலையாமைத்தென்றந
நேரினைந்துளனைந்தேமுற்றும்
நீத்தோன்போன்றுடனே
மாயமிகும்பேய்த்தேராமிப்புவி
வாழ்க்கையைமெய்யென்றே
மாழ்கியலைந்தழிவேனையருட்கண்
வைத்தேயாட்கொள்வாய்
ஆயர்கள்வெண்ணெயிர்மாதெருவியாழி
யடைக்குஞ்சென்னையிலவாழ்
அமலைவிலான்மகிழ்விமலைமுனீன்றருள்
கமலைவிநாயகனே. (௮

முற்றிற்று.

---

ஸ்ரீமெய்கண்டான் திருவடிவாழ்க.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவாலங்காட்டுப்புராணச்

## சரித்திரச் சுருக்கமும்;

காரைக்காலம்மையார் சரித்திரமும்.

இவை

விருத்தாசலம்

தியாகராஜகவிராஜரியற்றியவற்றை

வாயிலார் நாயனார் பரம்பரையில் வந்த

அஷ்டாவதானம்

பூவை-கலியாணசுந்தரமுதலியாரால்

விருத்திசெய்துதர,

திருவாலங்காடு இரத்னசபாபதி சுவாமியார

பக்தசன சபையாருளொருவராகிய

விருத்தாசலம்

சண்முகம்பிள்ளையவர்கள்

விருப்பத்தின்படி

ஷை தலம்-காரைக்காலம்மையார்மடம்

சபாபதி தம்பிரான் சுவாமிகளால்

சென்னை எம்பிரொஸ் ஆவ் இந்தியாபிரெஸில்

பதிப்பிக்கப்பட்டன.

நான்காம்பதிப்பு.

1897.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவாலங்காட்டுப்புராணச்

## சரித்திரச் சுருக்கம்.



### காப்பு.

நீரவிளையாட்டிற்றீம்பாற் கடலிடைநெடுங்கைநீட்டிக்
கார்நிறத்தவனைவெள்ளைத் திருவொடுகலந்துவாரிச்
சீதருவிசும்பின்வீசத் திங்களுமதுவுமென்னப்
பேர்தருமாலங்காட்டுப் பிள்ளைதாள் வணக்கஞ்செய்வாம்.

### இரத்னசபாபதி.

சீரணிந்த மிடற்றினொளி காளிநீலச்
  சேயரிக்கணொளிபோலத் திகழச்செவ்வி
யேரணிந்து புடவிமுதற் றாங்குஞ்சத்திக்
  கினிமையுற வலத்தாளை யியலவூன்றி
யாரணிந்து வானமுத லனைத்துந்தாங்க
  வமைத்திடத்தா ளுயர்ந்தனந்த விகற்பமேவு
நீரணிந்த நடநவிற்று மாலங்காட்டு
  நின்மலனைச் சின்மயனை நினைதல்செய்வாம்.

# திருவாலங்காட்டுப்புராணச்

## வண்டார்குழலியம்மை.

கரியமலர்த் தடங்குவளைக் கலகவாட்கண்
 கடையதனை லங்தொழிலுங் களியுற்றீசன்
புரியவரு ளேக்கருளிப் புரந்தராதி
 புனையுமணி மகுடநிரை பொழியுங்காந்தி
பரிபுரச்சீறடிப்பதுமச் செய்யதோட்டுப்
 பஞ்சியொழுங் கெனப்பரவப் பணியநல்குந
தெரிவரிய பரமாய வாலங்காட்டுச்
 சேயிழைவண் டார்குழலைச் சிந்தைசெய்வாம்.

## காளியம்மை.

தாயென வுலகங்காக்குஞ் சங்கரியருளால் தன்னின்
வேயுறு தோளில்வந்து வெவ்வியவவுணர்ப்போக்கி
நாயக னுடனேயன்று நாட்டியமியற்றுந் துப்புக்
காயல ராலங்காட்டிற் காளியை வணக்கஞ் செய்வாம

## மூலத்தானவிநாயகர்.

விரிதரு பசும்பொற் குன்றிற் பாரதம் விளங்கத்தீட்டி
வரிசெயு மருப்புத் துண்டம் வளர்சடைச் செருகி யாங்கு
தெரிதரக் குழவித் திங்கள் சென்னிசேர்த் தாலங்காட்டிற்
பரிவுசெய் மூலத்தானக் கரியினைப் பணிதல்செய்வாம்.

## சுப்பிரமணியர்.

ஓர்தரு பரமீதென்ன வோமெனு நாதத்தோங்கி
யார் தரு பயனையீசற் கருளுருவாகி நல்கிச்

சேர்முதற் றடிந்துவானந் தொழுதவிந் திரற்கல்கும்
பார்புக ழாலங்காட்டுக் கந்தனைப் பணிதல்செய்வாம்.

## திருஞானசம்பந்த சுவாமிகள்.

முழுதுமாய் நிறைந்துசுட்டு நீங்கியமுதலைச் சுட்டித்
தொழுதரு பரமிதென்னத் தெரிந்துமை தூயஞான
விழுதுறு தீம்பாலல்கி விரகொடு மதின்றுவையம்
அழுதுவாழ் வித்தபிள்ளை யடிமலர் முடிமேல்வைப்பாம்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்.

குரவர்தங் குறிப்புக்காகக் கலன்கழி கொள்கைபூண்டு
பரனடி யடைந்தகங்கைப் பணியணி யாகத்தாங்கி
விரவிய வமுதத்தீஞ்சொன் மெல்லிசை வீறும்பாவால்
அரன்மகிழ் சிறந்தநாவுக் கரசினை யகத்துள்வைப்பாம்.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

சுருதியு மரியும்வானோர் தொகுதியுந் தொழும்புபூண்டுங்
கருதியுந் தெளியமாட்டாக் கடவுளை யிரவினூடே
யொருதிரு வனையாடன்பாற் றூதென வுழலவேவிப்
பருதியி னுலககல்கு நம்பிதாள் பரவிச்சேர்வாம்.

## மாணிக்கவாசக சுவாமிகள்.

பொறிமுத லகன்ற வின்பப் பூரணப் புணர்ப்புப்போல, வறிவகன் றிருவர்கூடிக் கலந்துவே றற்றவின்பக், குறிசெயு மகத்தைக் கோற்றேன் கொழுஞ்சுவைக் கோவையாக்கிச், செறிபுகழ்த் தில்லைசேர்ந்த செம்மலுள் சென்னிசேர்ப்பாம்.

## நாயன்மார்கள்,

உயிருடல் பொருளென்றோரா தொழுக்குயர் நிலையாயின்பப்
பயிர்செயு முருவுமீசற் கிரண்டெனும் பான்மையோர்ந்து
செயிறறு பணியின்மேவிக் கொடைக்கடன் சேர்ந்துபோத
மெபர்வற வரற்காளாய தொண்டர்தாள் வணக்கஞ்செய்வாம்.

## காரைக்காலம்மையார்.

ஓதாமற் பலகலையு முணர்ந்தொளிருஞ்
 சிவஞான வுருவமாகிப்
போதாருங் கயிலையா னம்மைவாவென
 வப்பா புகுந்தேனென்று
தாதாரு மலர்க்கரத்துச் சதிக்கிசையப்
 பாணிதிருத் தாளமேந்தும்
வாதாடும் பிரானடிக்கீழ் காரைக்கா
 லம்மைபதம் வணங்கி வாழ்வாம்.

## முஞ்சிகேச முனிவர்.

இஞ்சி சூழ்திரு வியைவட வனமுறை
வஞ்சி சாம்பவி மகிழுற நடமிடு
நஞ்சி காமணி நம்ப னருள்பெறு
முஞ்சி கேச முனிவனை முன்னுவாம்.

## கார்க்கோடமுனிவர்.

பாற்கோ டேந்து பரன்ப ணிந்திடு
கார்க்கோ டன்கதை கற்ற மேலவர்

நாற்கோ டேந்திய நாக வொண்பிடர்
மேற்கோ டாது விளங்கி வாழ்வரோ.

## நூல்வழி.

மதிவயி றுடைக்குமால வனத்துயர் மேன்மைமுற்றுங், கதிதருமார்க்கண்டேயன் கருத்துற வுரைத்தவாற்றால், பொதி யையமா முனிவன்மக்கட்க முதெனப் புணர்க்குமின்சொல்,வதி தரு தமிழா னல்லோர் விளம்பென விளம்பலுற்றேன்.

## நைமிசாரண்ய சருக்கம்.

அகண்ட சச்சிதாநந்த கநீ பூதராகி விளங்கும் நிஷ்களபர சிவம், அறிவுபெத்த சித்துருவாகிய ஆன்மாக்கள் பொருளியல் புணர்ந்து வீடுபெறுமாறு,கருணைத் திருவுருவங்கொண்டு ஆங் காங்கெழுந்தருளித் தரிசனந்தந்து வரல்போல் இத்தொண் டை மண்டலத்தின்கணுள்ள திருப்பதிகளு ளொன்றாக விளங் குந் திருவாலங்காடென்னுந் திருத்தலத்தில் சுனந்தமுனிவர் நிமித்தங் காளியுடனே நிருத்தஞ்செய்ததும்,சோமசுவாமி,உரு த்திரசுவாமி, கிராதன் இவர்களுக்கெல்லா மோட்சமளித்தது மாகிய சரித்திரங்கூறப்படுகிறது. அதாவது தெங்கு - கமுகு பலா - அசோகு-அகில் - சந்தன முதலிய விருக்ஷங்களெல்லா நிறைந்து சூரியகிரணந் தெரியாது நிழல்செய்யவும், பலவித புஷ்பங்களும் புஷ்பித்துத் தேன்களும் மகரந்தங்களு மெங் கணு நிறைந்து வண்டுகள்கீதம்பாடவும்,அநேகவளப்பத்தோடு மிருக்கின்ற நைமிசாரணியத்தில், ஆணவ இருளாகிய அறையி லிருக்கப்பட்ட அகங்காரமென்னும் வலிய கல்லைச் சேதித்து,

மனமாகிய பூமியைத் திருத்தி, மௌனமாகிய வித்தைப்பதி
த்து அன்பாகிய சலத்தைச் சமர்த்திசெய்து, அப்பயிர் வளரு
கின்ற வரைக்கும் மாயையென்னும் பட்சிகள்வந்து கொத்தித்
தின்னவிடாமல் சிவத்தியானத்தினால் நிலைத்துக் காத்துச் சிவ
போகத்தையருந்து முனிவர்களெல்லாந் தங்கள் தங்கள் யோ
கங்கள் தவங்கள் யாகங்கள் விரதங்கள் இவை முதலியவை
களை ஆகமவிதிப்படிக்கு நடாத்திச் சிவானந்த முடையவர்களா
யிருக்குங் காலத்தில் சூதமாமுனிவர் ஓர்தினத்தி லங்கெழுந்
தருளினார். அவரைக்கண்டு நைமிசவனத்து முனிவர்களெல்
லாம் எதிர்சென்று உபசரித்து ஆதனத்திலிருத்தி அஷ்டாங்க
பஞ்சாங்கமாக நமஸ்கரித்துக் கூறுகின்றார்கள். எங்களுக்குத்
தேவரீர் தீர்த்த மூர்த்தி தலம் ஆகிய மூன்று விசேடமும் பொ
ருந்திய ஓர் திருத்தலத்தை மொழிந்தருளவேண்டுமென, சூத
முனிவர் கூறுகின்றார். கேளுங்கள் முனிவர்களே! நீங்கள்
சொல்லிய மூன்று விசேடமும் பொருந்தியிருக்கின்ற தலம்
ஒன்றிருக்கின்றது. அத்தலத்திற்சென்று காலமறிந்து ஸ்நானஞ்
செய்து அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு வேறுகவன
மின்றித்திரிகரண சுத்தியாகப் பரமசிவனது திருச்சந்நிதியிற்
சென்று தூலலிங்கமாகிய கோபுரத்தை வணங்கி உட்பிரவே
சித்து விநாயகரை நமஸ்கரித்து நந்திபால் விடைபெற்றுச் சிவ
பெருமானைக் கண்குளிரக் கண்டு திராவிடவேதத்தாற் றுதி
த்து ஒருதரம் வலஞ்செய்யாது மூன்று ஐந்து எழு என்றபடி
செய்து மெள்ள எண்ணெய்க்குடந்தாங்கிய பத்துமாதக் கருப்
பத்தை யுடைய மாது நடத்தல்போல வலம்வந்து மிக்க நன்

மையுடையவர்களாய் அடிசாய்ந்த பனையைப்போல நமஸ்கா ரஞ்செய்து துதிக்கின்ற பத்திமான்களெண்ணிய வெண்ணங்க ளெல்லா முடித்து மோக்ஷத்தையுந் தருகின்றதாயும், அநாதி யாகிய திருத்தலமாகியும் பரமசிவமானவர் தக்ஷிணாமூர்த்தமாக விருந்தகாலத்தில் மன்மதன் புஷ்பபாணம் பிரயோகஞ்செய்த தால் கோபமிகுந்து அம்மன்மதனை நெற்றிக்கண் கொண்டெரி த்து அவனுக்கு அனங்கனென்னும் பெயரை நாட்டிவிட்டு தா மடியாரின் பொருட்டிருந்தயோகத்தை முடித்தற்பொருட்டிவ் வுலக மெங்கணுந் தேடியதிக ரகசியமாக விருக்கின்ற தானத் தினைப் பார்த்துக்கொண்டு வருங்காலையி லெங்குஞ் சம்மதப் படாம லித்தலத்திற்கு வந்து யோகத்தை முடித்துக்கொண் டவ்விடத்தேயன்புகூர்ந்துவீற்றிருந்ததலமாகியுமிருக்கின்றது.

## சுனந்தமுனிவரென்னும்
## முஞ்சிகேசமுனிவர் சரித்திரம்.

அத்தலத்தின் பெயரோ திருவாலங்காடெனக் கூறு வார்கள். ஆதியிலே திருக்கயிலாயத்தில் முப்பத்து முக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள் சூழ்ந்தி ருக்கும்படி யாகப் பார்வதிசமேதராய்ப் பொற்சிங்காதனத்தில் பரமசிவன் திருவோலக்கங்கொண் டிருக்குங்காலத்தில் கைலாயச் சார லில் அனந்தகாலந் தவஞ்செய்துகொண்டுவந்த சுனந்த முனிவ ரை நோக்கிப் பரமசிவமானவர் உமக்கென்னவரம் வேண்டு மென்று திருவாய் மலர்ந்தருள, சுனந்தமுனிவர் நமஸ்கரித் துச் சுவாமீ! தேவரீர் நடித்தாலன்றி உலகம் நடைபெறாது

என்ற குறிப்பைக் காட்டுகிற திருநடன தரிசனந் தந்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, அம்முனிவரை நோக்கி நீர் திருவாலங்காடென்னும் பெயரை யுடையதாகப் பூலோகத்திலோர்தல மிருக்கின்றது. அத்தலமோ நாம் திருநடனஞ் செய்தருளுகின்ற தலங்களாகிய திருக்கயிலாயம், சிவலோகம், இமயபருப்பதம், சுவர்க்கலோகம், பத்திரபீடம், நேபாளம், காசி, காமரூபம், மந்தரகிரி, கமலானந்தகிரி, புயங்காசலம், கதலித்தானம், திருக்கேதாரம், திருவனம், பரியாத்திரம், சந்திரத்தானம், சுமிந்திரம், மகமேரு, சண்பகவனம், துளசிவனம், பொற்கூடம், சிவாச்சிரமம், சித்திராச்சிரமம், சித்திரகூடம், நந்திபுரம், சிரபுரம், சாளக்கிராமம், சிதம்பரம் இவைமுதலிய அனந்த திருத்தலங்களுக்குள்ளே தில்லைவனமென்னுஞ் சிதம்பரத்தில் யாம்செய்தருளுகின்ற நடனம் ஆனந்தத்தாண்டவம். அத்தாண்டவமானது அடியவர்களது மலமாயையைநீக்கி ஆனந்தத்தைத் தருவதாகும். மற்றையத் தலங்களிற் செய்கின்ற நடனமெல்லாம் மோட்சமே பெரிதென்று மதிக்கத்தக்கதாகச் சீவர்களுக்கு உண்மையைத்தருகின்றனவாம். இத்திருவாலங்காட்டிற் செய்கின்ற தாண்டவமோ சண்டதாண்டவம். அத்தாண்டவமானது சனனமரணங்களை நீக்கி யாவர்களுக்கும் இருவினையொப்பும், சத்திநிபாதமும், குருவருளும், ஞானசாதனமும், மும்மலக்கழிவும், வாதனைநீக்கமும், ஞானப்பெருக்கமும் தருகின்றதாகும். மற்றைய நடனத்தானங்களுக்கெல்லாம் ஆதியாகிய தலமாகும். அத்தலத்திற்சென்று தவஞ்செய்து கொண்டிருந்தால் யாம்நடன தரிசனங் காட்டுகிறோமென்றுகூற, அதி

கசந்தோஷத்துடனே யுருகி யுடல்குழைந்து பரமசிவனைத் தியானித்து விடைபெற்றுக் கொண்டு திருவாலங்காட்டிற்கு வந்து தவஞ் செய்துகொண டிருந்தனர்.

## கார்க்கோடகர் சரித்திரம்.

மற்றோர்காலத்துப் பரமசிவத்தின் றிருக்கரத்திலிருந்த கங்கணமாகிய கார்க்கோடகன் ஒருநாள் சுவாமியின் றிருக்கரத்தில் விடத்தைக்கக்கிவிட, அக்கார்க்கோடகனைப் பரமசிவனே க்கி நீ யென்றுமில்லாத அகுணத்தைச் செய்தமையால்கம்மை விட்டு நீங்கித் திருவாலங் காட்டுக்குப்போய்த் தவஞ்செய்து கொண்டிருந்தால் நாம் சுனந்தமுனிவருக்காகத் திருநடனஞ் செய்தருளப்போகிறோம் அப்போது உனக்கும் அனுக்கிரகந் தந்தருளுகிறோ மென்று கூற, கார்க்கோடகன் தான்செய்தது அபசாரமென்று கருதிச் சுவாமியைத் துதித்துப்பெருமானே! நான் பூமியின்மீது எவ்வாறு செல்வேன் எனக்குச் சத்துருவாகிய கருடன் முதலிய பட்சிகள் துன்பஞ்செய்யுமே யென்றனன். கார்க்கோடகனே! பயப்படவேண்டாம், என் பாலுள்ள நீ கருடனைக்கண்டு "என் கருடா சுகமாயென்றுகேட்க," இருந்த விடத்திலிருந்தால் சுகந்தான் என்று விடைபெற்ற வுனக்கு அச்சம்வருவானேன்? ஆயினும் இதோவிருக்கிற தடாகத்திலே மூழ்கித் திருவாலங்காட்டின் முத்தித்தீர்த்தத்திலெழுந்திருப்பாயென்றனர். அங்ஙனமே கார்க்கோடகர் திருவாலங்காட்டுக்கு வந்து சுனந்தமுனிவரைக் கண்டு மிகவு மன்புகூர்ந்து பரமசிவத்தின் கட்டளையைக்கூறி அச்சுனந்த முனிவருந் தானுமாகத் தவஞ்செய்து கொண்டிருந்தார்கள்.

## காளிச்சரித்திரம்.

இதற்கு முன்னமே நிம்பன், சும்பன் என்கிற பெயரை யுடைய அசுரர்களிருவர்கள் அனேக சேனை சமுத்திரங்களுட னே அனந்த வரப்பிரசாதிகளாயும் தங்களுதிரம் பூமியிற் சிந்தினால் அதெல்லாம் அசுரர்களாய் விருத்தியடைந்து பகை ஞர்களை யெதிர்த்துப் போர்செய்யும் மகா பலவந்தர்களாய்த் தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், மானிடர்கள்,மிருகங்கள், பட்சிகள் முதலியவைகளை யெல்லாம் நாடவொட்டாமல், பட் சித்துக்கொண்டு மதாங்காரிகளாகத் தங்களுக் கொப்பிலாமலி ருக்குங்காலத்தில் தேவர் முனிவர் முதலியவர்க ளெல்லாம் வருத்தமடைந்து திருக்கயிலாயத்துக் கேகிப் பரமேஸ்வரியி னிடத்தில் முறையிட்டுக்கொள்ள, பரமேஸ்வரியார் இரக்க முற்றுத் தமதுநேத்திர விஷநோக்கத்திலிருந்து காளியையுண் டாக்கி அக்காளிக்கு அனேக கூளிப்படைகளையுந் தந்து தா முஞ் சூலபாணியாய்க் காளியோடெழுந்தருளி நிம்பன் சும் பன் முதலிய அசுரர்கள் யாவரையுந் தாம் சூலத்தினா லதஞ் செய்து காளியானவள் அவ்வுதிரங்களெல்லாஞ் சிந்தவொட் டாமல் கபாலத்தில் நிறைத்துப் பானம்பண்ணும்படியாகச்செ ய்து அசுரர்களை யெல்லா நாசமாக்கிவிட்டுக்காளியை அவ்வன த்துக் கதிபதியாக இருக்கக் கட்டளைசெய்து பரமேஸ்வரியா னவர் திருக்கயிலாயம் போயினார்.

## நாரதர்சரித்திரம்.

காளியானவ ளற்றைநாள் தொடங்கி யவ்வனத்துக் கதி பதியாகி உதிரபானம்பண்ணிய வீரவெறியினால் அந்த அசு

ரர்கள் செய்த கொடுமைமுற்றுந் தானே செய்துகொண்டிரு க்கும் நாளையில், சுனந்தமுனிவர் கார்கோடகர் இவர்களுங் காளிக்குப் பயந்தவர்களாய்த் தவஞ்செய்துகொண் டிருக்குங் காலத்தில் சுனந்தமுனிவர் பூமியிலே மறைந்து மேலெல்லா மண்மூடி முடியெல்லாம் முஞ்சம்புல்லு முளைத்துப்போய் நெடுநாளாகத் தவநிலையிற்றானே யிருக்குங்காலத்தில், ஒரு நாள் நாரதமுனிவர் அத்திருவாலங்காட்டுக் கெழுந்தருளி முத்தித் தீர்த்தத்திற்படிந்து பரமசிவத்தின் சந்நிதியடைந்து வணங்கித் துதிசெய்து நித்தியானந்த மகாசுனந்த முனிவரை யும், கார்கோடகரையுங் கண்டு அவர்கள் வந்து தவஞ்செய்து கொண்டிருக்கின்ற காரணத்தை யவர்களாலறிந்து மெத்தவும் ஆராமைகூர்ந்து காளியினால் அவர்களடைந்திருக்கின்ற வருத் தமு நோக்கிக் கயிலாயத்திற்குப்போய், பரமசிவனோடு உங்க ளுடைய வருத்தங்களையும் காளியின் கொடுமையையுங்கூறிச் சுவாமியையெழுந்தருளச் செய்கிறேன் நீங்கள் வருந்தா திரு ங்களென்று காளியிருக்குந் தானத்தை நோக்கிவருங்காலை யிற் காளியானவள் நாரதரைக்கண்டு வக்கிரதந்தங்களை விரி த்துக்கொண்டு பட்சிக்க வந்தனள். நாரதரானவர் கண்டு ஆச் சரியமடைந்து ஆகாயமார்க்கமாக எழுந்தருளி கயிலாயத்திற் குச் சென்று பரமசிவன் சன்னிதியிற்போய் நமஸ்காரஞ்செ ய்து கீதங்கூறிச் சுவாமிக்குச் சந்தோஷத்தை விளைவித்துப் பின்பு சுனந்தமுனிவரும் கார்கோடகருங் காளியினாற் படுகி ன்ற வருத்தத்தைக்கூறிட அதைக்கேட்டவுடனே தனதுஅறு பத் திருக்கோலங்களி லொன்றாகிய கோரவடிவம் தாங்கிப்

பூதங்கள் வேதாளங்கள்,கணங்கள், கூளிகள் சூழ்ந்துவரும்படி யாய்ப் பிரளயகால ருத்திரனைப்போலக் கோபமிகுந்து வயிரவ மூர்த்தமாகப் பிரமவிஷ்ணு முதலியதேவர்களெல்லா மின்றைக்கே பரமசிவனுக் குற்ற கோபாக்கினியினு லுலகமெல்லாஞ் சாம்பலாகப்போய்விடுமென் றச்சங்கூறும்படியாக அக்கினிகளைக்கக்காநின்ற மலைபோல ஆகாயத்தைஅளாவியசூலத்தையுங் கபாலத்தையு மேந்திக்கொண்டும் பிரமவிஷ்ணுக்களின் சிரமாலைகளெல்லாங் கழுத்தினிடமாகத்தரித்துக்கொண்டும் காதினிடமாகச் சர்ப்பகுண்டலங்களானவைப்பிரகாசிக்கவும்,சர்ப்பத்தினல் பூணுநூலானது பிரகாசிக்கவும்,கபாலம் சூலம் அங்குசம் பாசம் பலகை வாள்சத்திமணியாகிய வண்டைகளும் ஆபரணங்களாக அஷ்டபுயத்திலும் பிரகாசிக்கவும்,ஞான வெண்ணீற்றை யெங்கணுமணிந்து அரைஞாண், பாதகிண்கிணி, மாலை இவை முதலிய வாபரணங்கள் சர்ப்பங்களினல் பிரகாசிக்கவும், பிரமாவின்கபாலங்களுடன் மேகலைக ளசைந்தாடவும், இனையவாகிய நடனவலங்காரஞ் செய்துகொண்டு நந்திகேச்சுரன் சண்டன்முதலியோர் சூழ்ந்துவரும்படியாகப் பூமியிலடிவைக்குங் காலத்திற் பூமிகள் நெரிந்திடவும், அட்டகாசஞ் செய்யுங் காலத்தில் அண்டமெல்லா நெரிந்திடவுமாகிய அகண்டாகார வுருவமாகித் திருவாலங்காட்டுக் கெழுந்தருளிக் காளியிருக்கின்ற இடத்தை நோக்கி வந்தனர்.

## நிருத்தயுத்தசரித்திரம்.

காளிக்கு முதற் காவலாயிருக்கின்ற பசாசுகள் முதலியவெல்லாம் யுத்தஞ்செய்வதற் கெதிர்த்தவுடனே சிவகணங்க

னெல்லாம் அப்பசாசுகளுடனே யெதிர்த்துக்கொண்டு யுத்தஞ்
செய்தன. பூதங்கள், வேதாளங்கள், பூனிகள், சாகினிகள்,
இடாகினிகள், மண்ணைகளாகிய அறுவர்களுடனே பூதப்ப
டைக ளெதிர்த்து மலைமரங்களை வேரோடும் பிடுங்கி யெறி
ந்து ஆகாயமெங்கணு நிறைத்து ஒருவரையொருவர் பற்களி
னாற் கடித்து உதிரஞ் சிந்தும்படியாக்கியும் ஒருவரையொரு
வர் கைகளினாலடித்தும் ஒருவரை யொருவர் தோள்களைப
பிடித்து நெருக்கிக் கண்பிதுங்கச் செய்தும் காலினாலுதைத்
தும் நகங்களினாலுடலைத் தகிர்த்தும் இன்னும் பலபல விதமாக
த்தஞ்செய்யுங்காலையில் காளிப்படைகள் விசையம் பெறுவ
தைக்கண்டு அரிஅர புத்திரனானவன் வெள்ளானையின்மே
லறிக்கொண்டு அக்காளிப்படைகளுக்கு நேராகவந்து எதிர்
தகாலத்தில் சாகினி டாகினி முதலிய காளிப்படைகள் யா
வும் பயந்தோடிக் காளியினிடத்தில் அபயங்கூற, உங்களுக்கு
அச்சமுண்டாகிய காரணமென்னவென்று காளியானவள் வி
னவ, யாங்கள் யுத்தஞ்செய்புங்காலத்தில் யாரோவொரு குமா
ரன் சேனைத் தலைவனாக வந்தெதிர்த்தனன், அவனைககண்டு
பயந்து உன்னிடத்திற்கு வந்து அபயங்கூறினோங்காத்திடவே
ண்டுமென்ன, காளியானவள் அக்கினியைப்போலக் கொதி
ந்தெழுந்து அவனெங்கே யிருக்கின்றான் காட்டுங்கள் இப்
போதே யவனைப் பக்ஷிக்கிறே னென்று கோபத்தோடே அரி
அர புததிரனுக்கு நேராகவந்தகாலத்தில் இவள் கோபத்தை
யும் பலத்தையும் வந்த வேகத்தையுங் கண்டு பயந்து பரமசிவ
ரிடத்திற்போய் அரிஅர புத்திரன் சொல்லும்போது, காளி
யானவள் விடேனென்று தொடர்ந்து வருகிற உக்கிரவடிவத்

தைப் பார்த்துப் பரமசிவமானவர் யாவவையுங் காக்கு நிமித்தம் திருவிளையாட்டாக இவளுடனே யெதிர்க்கவேண்டுமென்று சூலத்தைக் சுழற்றிக்கொண்டு அண்டங்க ளெல்லாங் கிடுகி டென் றதிரும்படியாகக் காளிக்கு நேராகவந்து நின்றவுடன் ஆகாயத்தை யளாவிய சடையும் அஷ்டத்திக்கையு முடைக் காநின்ற எட்டுப்புயமும் கங்காளந்தங்கிய மார்பும் அண்டங்க ளையெல்லாந் துளைத்துருவத்தக்க சூலப்படையும் அகோரமா கிய வுருவமுங் காளியானவள் கண்டு எல்லா விதத்தினும் நம க்குச் சமத்துவ மானவனென்று பரமேஸ்வரியின் கிருபைய லறிந்துகொண்டு இவனை உபாயத்தினால் வெல்லவேண்டு யுத்தஞ்செய்து செயிக்கக் கூடாதென்று எதிர் முக நீங்கி, தனியாக நின்று ஆலோசித்து வீரியமாகிய சொற்களைச் செ ல்லி இவனது கருத்தை யறிந்து நடனத்துக்கு இசையச்செ தலே முக்கிய காரணமென்று சமுத்திர கோஷ்டம் போல முழக்கமாகப் பரமசிவனைப் பார்த்துச் சொல்லுகிறாள். நீ நமது வனத்தில் வந்தனை காளியென்னும் பெயரையும் அறிந் திலை உலகத்தையெலா மழிக்காநின்ற காலருத்திரனு மிங்ங னம் வருவதற் கச்சங்கொள்ளுவன். நீவந்த காரணமென்ன நீயுத்தஞ்செய்வதை நிறுத்தி விரைவாக யான்கேட்ட கேள்வி க்குப் பதில்சொல் அப்படி சொல்லாவிடில் உனது சேனைகளை யெல்லாங் கவளம்போல் விழுங்கிப் போடுவே னென்று கூற, அதைப் பரமசிவன்கேட்டுச் சிறிய புன்னகை செய்து கோபத்தையடக்கிக்கொண்டு கெம்பீரவாக்காகக் காளியை நோக்கி யடிபேதாய்! நீயார் இங்ஙனம் வந்தகாரியமென்ன ந

மை வழிபடுகின்ற அடியவர்களெல்லாம் வசித்திருக்கும்படியா
கிய ஆலவனத்தையெல்லாம் சின்னபின்னஞ்செய்தனே. மக்க
ள் மிருகங்கள் முதலியவைகளைப் பட்சித்து அடவிகளையெல்
லாங் குறையாக்கிறாய். ஆகையால் இப்போதே இக்கானகத்
தைவிட்டு ஓடிப்போய்விடு, அப்படிக்குப் போகாவிட்டால
இக்குலத்திற்கு இட்சணமே பட்சணமாவா யென்று கூற, கா
ளியானவள் பரமசிவனைப்பார்த்து மிகுந்த சாமர்த்தியனைப்
போலப் பேசுகிறாய் அதனு லென்னலாபம் நீ யென்னுடன்
போர்செய்து யென்னைச் செயித்து வனத்தை யுன்னுடைய
தாக்கிக்கொள்ளவேண்டும். ஆனதால் நீபிழைக்கவேண்டி யிவ்
வனத்தைவிட்டு அகலப்போய் விடுவாயென்று காளிகூற,
அதற்குச் சந்தோஷித்து நீசொல்லிய வாறே மற்போர்-
கற்போர் - சூலப்போர் - வாட்போர் இவைகளில் உன
க்கு வலிமையிருந்த தெதுவோ வதனைச்செய்வாய் நமக்
குஞ் சந்தோஷமாயிருக்கிறதென்று சொல்ல, காளியானவள்
எனககிசைந்த செய்கையானது உனக்கும் இசைந்ததா
னாற் செய்யலாமென்ன அப்படிக்குச் செய்வதில் சம்மதந்தா
னா சொல்வாயென்று பரமசிவன்கூற வெனக்குச் சம்மதமான
து நிருத்தயுத்தமென்றாள். அதனைச்செய்வதி லெனக்குஞ் சந்
தோஷந்தானென்று சுனந்தமுனிவன்கார்க்கோடகனுக்கருளிய
வண்ணத்தையு முடிக்கவேண்டிக் காளியைப்பார்த்து நீ சொ
ல்லியவண்ணம் நிருத்தஞ்செய்வதற்குச்சபைவேண்டுமே அது
வெவ்விடமென்று காளியைக்கேட்க, காளியானவள் நீ யெந்த
யிடம்பார்த்துச் சொல்லுகிறாயோ அவ்விடத்துக்கு யான் வரு

கிறேனென்னப் பரமசிவமானவர் சரிதானென்று காளியான வள் பின்சென்றுவர முத்தித்தீர்த்தத்தின் பக்கலில் வந்து நடனஞ்செய்வதற் குரியததானமீதென்று காட்டுங்காலத்தில் அங்ஙனம் தவஞ்செய்துகொண டிருந்த காற்கோடகர் சுவா மியைக்கண்டு வாய்குளறி விழிசோர்ந்து ஆனந்தபாஷ்பஞ்சொ ரிய நமஸகரித்துநிற்க, கருணைப்பிழம்பாகிய பரமசிவன் களி கூர்ந்து சுனந்தமுனிவன் தவஞ்செய்யுமிடமெவ்விடமென்ன, காற்கோடகர் அந்த இடத்தைத்தெரிவித்தனர். அப்போது சுன ந்தமுனிவன் வடிவத்தைப் பூமியானது வளர்ந்து மறைத்துக் கொண்டு அவரதுமுடிமயிர்களெல்லா முஞ்சம்புலலாக மூளைத் து முஞ்சிகேசியாகச் சமாதியிலே யிருப்பதைக்கண்டு சங்கரன் ஆராமைகூர்ந்து கைகளினுற் றேகமெல்லாம் பரிசித்துக் குளி ரசசியாக்கிக் கருணைநாட்டம் வைத்தளவிலே சுனந்தமுனிவர் பகிர்முகப்பட்டெழுந்து பரமசிவன் பாதத்தில் நமஸகரித்துக் கண்ணீர்வார மெயசிலிர்க்கப் பலபலதரம் பூமியிலே வணங்கி யெழுந்து ஆசாபாசத்தின் மூலங்களையறுத்தருளாநின்ற பரஞ் சோதியானது அடியேன் முன்ன மெழுந்தருளியபடியால் இ னிமே லொருகுறைவுமில்லை யெனக்குச் சமதையாகியவாக ளொருவரு மில்லையென்றுகூறச்சந்தோஷமாகிச் சுனந்தமுனி வரைநோக்கிப்பரமசிவன அனுக்கிரகஞ்செய்கிறார். நீர் சமாதி யிலிருக்கையில் உமது மேனியெல்லா மண்மூடினமையால் உமது சிகையெல்லாம முஞ்சியாயினது. ஆனதால் முஞ்சிகேசி யென்னும் பெயர்பெற்று விளக்கமாக இந்த ஆலவனத்திலே நம்முடனே யிருக்கக்கடவாய் நமது அடியவருக்குள்ளே அன்

யர்களா யுன்னைவணங்கியபேருக்கு வேண்டியவரங்க ளீய்ந்து தேவர்களும் போற்றும்படியாக வாழக்கடவாயென்று பலவாகிய வரங்களைத்தந்து முன்பு நீர்கேட்ட நடனமும் காளியின் வாத முன்னிலையில் நீருங் காற்கோடகனுங்கண்டு தரிசிப்பீர்களென்றுகூறிக் காளியைப்பார்த்து நடனத்துக்கு எழுந்தருளுமென்ன மத்தளமுதலிய வாத்தியமில்லாவிட்டால் நடனங்களெல்லாம் பிரயோசனப்படாதென்று காளிகூறுதலால் அப்போது பசுபதி, தேவர்களையெல்லாம் நினைத்தகாலத்தில் விஷ்ணுகருடவாகனத்தினும், பிரமதேவன் அன்னவாகனத்தினும், தேவேந்திரன் வெள்ளையானையினும்,அக்கினிதேவன் ஆட்டுக்கடாவினும், எமன் எருமைக்கடாவின்மீதும், மற்றைய தேவர்களும் அவரவர்களுக்குரிய வாகனத்தின்மீது வந்துசேர்ந்தார்கள். இப்படிக்கு முப்பத்துமுக்கோடிதேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும், பதினெண்கணங்களும், பதினோருகோடிருத்திரர்களும், பன்னிரண்டு சூரியர்களும், சந்திரனும், நந்திகேசுரன், பிருங்கிமுனிவன், பாணுகம்பன், வாணசுரன், குண்டோதரன், கும்போதரன், கூழ்மாண்டவர்கள், உருத்திரகணிகையர், தெய்வகணிகையர், நாககணிகையர் முதலாகிய பேர்களும் வந்துசேர்ந்தனர்.

## திருநடனசரித்திரம்.

பரமசிவன் பிரமாமுதலாகிய தேவர்களைநோக்கிக் காளியானவள் தன்னோடு நிருத்தஞ்செய்து செயம்பெற்றால் ஆலவனம்பெறலாமென்றும், இல்லாவிட்டால் வனத்துக்கு வரக்கூடாதென்றுஞ் சபதங்கூறினமையால் நடனஞ் செய்யப்

போகிறோம் நீங்களெல்லாஞ் சாக்ஷியாகவும், நடுநிலையாகவும் இருப்பதுமன்றி வாத்தியங்களுஞ் செய்யவேணுமென்றுகூற, பிரமவிஷ்ணுக்களிருவரும் முறையேதாளமத்தள மடிக்கவும், சரஸ்வதிதேவியார் வீணைவாசிக்கவும், மந்தம்-மத்திமம் தாரம் மூன்றாகிய கதிகளோடே கீதங்களை நாரதர் கிம்புருவரிருவர்கள் பாடவும், தெய்வப்பெண்கள் கைகளைத்தட்டவும், சந்திர சூரிய ரிருவர்களும் குழலிசையூதவும், நந்திகேசுரரும், கந்தசுவாமியும் இராகம்பாடவும், தேவர்களெல்லாஞ் சபையோர்களா யிருக்கவும் பார்வதியானவள் சபாநாயகியாயிருக்கவும், முஞ்சி கேசமுனிவரும் காற்கோடகரும் தலைவர்களாக நடனதரிசனங் காண்பதற் கெண்ணங்கொண்டிருக்கவும் இப்படிக்கு நானாவித அங்கமும் பொருந்தியவுடனே நடனசபாபதி பரதநூலிற்சொல்லிய கோசுகோட்டியென்னும் ஆடலையாடுதற்குத் தொடங்கினார். காளியும் அந்த நடனத்தையே செய்யத்தொடங்கிக் கைவழியே நேத்திரமிருக்க, கண்வழியே மனமிருக்க வைத்து நவரசங்களும் பொருந்தும்படியாக நடனஞ்செய்தாள் சபையோர்களெல்லாங்களிகூரும்படியாக நடராஜன் அவளுடனே சமரசமாக நிருத்தஞ் செய்யுங்காலத்தில் இளம்பிறையுங் கங்கையுந் தலைமாலைகளும் அசையாமலிருக்கும் பொருட்டு மிருதுவாக அசைந்தாடினார். அதனைக்கண்டு காளியானவள் சபையோர்களைப்பார்த்து ஈசன்தோற்றுப் போயினார் யானே வல்லவளென்று விருப்புற்றகாலத்தில் பரமசிவமானவர் இந்தநடனத்தில் நம்முடன் சரியாக நிருத்தஞ் செய்தாய் உனக்குச் சமதையாக நடிக்கத்தக்க ஸ்திரீகளில்லை

இன்னொரு நடனஞ் செய்கிறோமென்று பாண்டரங்க மென்னுஞ் சண்டதாண்டவஞ் செய்யத் தொடங்கினார் அக்குறிப்புணர்ந்து பிரமா - விஷ்ணு - நந்திதேவர் - கந்தர் - சூரியன் - சந்திரன்-சரஸ்வதி-நாரதர்-தும்புரு உருத்திரகணிகையர்-தெய்வகணிகையர்-நாககணிகையர் இவர்கள் யாவருந் தாளம் மத்தளம் குழல் வீணை பாடல் இராகம் ஒத்து இவைகளெல்லாஞ் சோராதிசைக்கத் தொடங்கினாக ளப்போது பரமசிவம் ஓர் திருப்பதத்தைப் பூமியிலூன்றி யோர் திருப்பதத்தை யாகாயத்திலேற்றி யோர் திருக்கையை ஆகாயத்திற் றூக்கிய பாதத்தில் கவசமாகவைத்து மற்ற மூன்றுகைகளும் தாள்மேலிருக்க, அக்கரங்களினும் மற்ற கைகளினும் மழு-சர்ப்பம்-கிளி-தமருகம்-சூலம்-சதங்கை-கபாலம்-அபையமென்றாகிய ஆயுதங்களெட்டையும் தாங்கி அஷ்டபுயத்தையும் நீட்டிச் சடைகளெல்லாம் ஆகாயத்திற்போ யடிபட்டு நக்ஷத்திரங்க ளுதிரவும் அஷ்டநாகங்கள் அஷ்டதிக்கு யானைகள் சத்தசமுத்திரங்கள் அஷ்ட குலகிரிகளெல்லாம் வாய்விட்டுக் கதறும்படியாகச் சண்டதாண்டவ மென்னும் ஊர்த்ததாண்டவஞ் செய்யுங்காலத்தில் தமது காதிலிருந்த மணிக்குழையானது நழுகி வீழ்வதைக்கண்டு குனியாமல் வாயினாற் கவ்விக்கொண்டனர். அக்காலையில் விஷ்ணுமுதலிய தேவர்கள் யாவர்களு மயக்கமெய்தி மூர்ச்சையாய் இவ்வூர்த்ததாண்டவ வேகத்தைச் சகிக்கக்கூடாதவராய்த் தோத்திரஞ்செய்யத் தொடங்கினார்கள்.

காளியானவள் மயக்கமடைந்து நாணி நின்றனள், அப்போது நடேசன் இரக்கமுற்று மெதுவாகநிருத்தஞ்செய்தனர்

தேவர்களெல்லாம் உமையவளிடத்துக்கு வந்து இன்னொருக்கால் நிருத்தஞ்செய்வதற்குச் சுவாமி தொடங்குவாராகில் பஞ்சபூதமும் லயப்பட்டுப்போம் ஆனதால் பரமசிவனை வேண்டிக்கொண்டு நடனஞ்செய்யாதிருக்கச் சொல்லுமென்று கூற, உமையவளும் சுவாமியைக் வேண்டிக்கொண்டனள். அப்போது காளியைப்பார்த்து நாமெல்லாமல் இந்த நடனத்தொழிலில் உனக்குச் சமனீதயானவர் ஒருவருமில்லை யானதால் நமது இடதுபாகத்திலுனக்கு ஆலயமும் பூசனையுர் தந்தருளினேம் இந்த ஆலவனத்திற்றனே எப்போதும் வசிக்கக்கடவாய் இங்குவருகின்ற அடியவர்கள் யாவர்களும் உனக்கு முன்னுதாகப் பூசைசெய்து நமக்கு அதின்பிறகு செய்தால் பயன்பெறுவார்கள் இல்லாவிடில் பயன்பெருர்களென்று கூறி வேண்டியவரங்களைத் தந்தருளினர். யான்செய்ததெல்லாம் அபசாரமென்று காளியானவள் பயங்கொண்டு வணங்கிநின்ருள். முஞ்சிகேச முனிவருக்கும், காற்கோடகருககும் அனேகவரத்தைத் தந்து தமது சந்நிதானத்திலிருக்கும்படியாகக் கட்டளைசெய்தார். அந்த முஞ்சி கேசமுனிவருக்கும், காற்கோடகருக்குமாகவே இப்போது மார்கழிமாதம் திருவாதிரையில் சுவாமி நடனதரிசனந் தந்தருளுகிறது. அத்திருவிழாவில வெள்ளை சாத்துகிற விதி என்னவெனில், திரோபவம் - அது உலகத்தை மறைக்கின்றது. மையிட்டுக்கொள்ளுகிற விதி யென்னவென்ருல், பரமசிவன் அசுரர்களையெரித்து அசுரர்கள் மேனியின் கறுப்பை யணிந்தனர். அதுதான் மையிடுவது. அது நிற்க, திருப்பாற்கடலில் நித்திரைச்செய்கின்ற விஷ்ணுவின்

உடலெல்லாம் வேர்த்து ஆதிசேடன் மேனியெல்லாம் நனைந்து ஆதிசேடன் விஷ்ணுவை நோக்கி இதென்னென்று வினவ, திருவாலங்காட்டில் பரமசிவமானவர் முஞ்சிகேச முனிவர் நிமித்தம் காளியோடேவூர்த்ததாண்டவஞ் செய்தனர். அதற்கு நான் மத்தளமடித்து வருத்தமாகி வந்த வேர்வை யிதுவென்றார். அடியேனுக்குத் தரிசனை செய்விக்காமற் போனீரேயென்று ஆதிசேடன் கூறத் தில்லையில் ஆனந்தத்தாண்டவஞ்செய்வார் அப்போது நீ பதஞ்சலியாக அவதரித்து அத்தரிசனையைக் காண்பாயென்றருளிச் செய்தார்.

## உருத்திரசாமி சரித்திரம்.

பொன்மதிலானது சூரியன் இரதத்திற்கட்டிய பச்சைக் குதிரைகளைத் தடுக்கின்ற உன்னதம் பொருந்திய பிரமத்தலமென்னும் பெயரையுடைய நகரத்திலிருக்கின்ற வேதியன், அவனோ நான்குவேதமாறுசாஸ்திர முதலியவைகளெல்லாங் கரைகண்டவனவன்பெயரோ தருமசீலன், அவன்குமாரன்உருத்திரசுவாமி யென்னும் பெயரையுடையவன். அதிதிகளுக்கு அன்னதானஞ்செய்து வருகின்றவன். அவனது பத்தினியானவள் அருந்ததியையொத்த கற்புடையவள் அவள்பெயரோ குணவதி, அந்த அம்மாள் பத்தாவின் ஏவலைத்தடுக்காமற்சென்னியில்வைத்து உபசாரஞ்செய்து வரப்பட்டவள். ஸ்திரீகளுக்குரிய நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு எனனும் நான்குவித குணமும் பொருந்தினவள். இவர்களிருவரும் அதிதிபூசை செய்துகொண்டு வாழ்ந்திருக்கையில், சகலகலையுந் தெரிந்த ஒருவேதியன் பசியினால் அன்னமென்று ஒருநாள் அவர்வீட்டு

க்கு வந்தார் அவரை உபசாரஞ்செய்து அன்னம்படைக்காமல் ஊழ்வலிவசத்தினால் அந்த அம்மாள் பராமுகமாயிருந்தனள். நம்மை யிவள் மதிக்கவில்லையென்று அந்தவேதியன் அவ்வீட்டைக்கடந்து வீதியிற் போகுங்காலையில், வேறொரு பிராமண ன் தன்வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய் அவருக்கு அன்ன மளித்தனன்; தன்வீட்டுக்கு வந்ததும், பத்தினியார் ப திக்கா மலிருந்ததும், அவ்வேதியன் மற்றொரு வீட்டுக்குப்போயுண்டதும் உருத்திரசுவாமி யென்கின்ற வேதியனறிந்துகோபங்கொண்டுபெரிய கருங்கல்லையெடுத்துத் தனது பத்தினியின் றலை மேலெறிந்து வதைசெய்து அவளைக் கிணற்றிலே தள்ளினன். அப்போது உருத்திரசுவாமியை ஸ்திரீஹத்திதொடர்ந்து பசாசுபோலக் கணநேரமாயினும் விடாமற் புத்தியைக் கெடுத்த லால் ஆச்சிரம தருமம்விட்டு வேதங்காயத்திரிமுதலிய சந்தி வந்தனைகளெல்லாந் தவிர்ந்துவிதிவிலக்காகச் சகல பக்ஷணமுஞ்செய்துகொண்டு உலகத்திலிருக்கும் புண்ணியத்தலந் தீர்த்தம் இவைமுதலியவைகளால் தீராமல் வடவனமென்னுந் திருவாலங்காட்டை யடைந்தவுடன், பசாசுபோலத் தொடர்ந்து வந்த ஸ்திரீஹத்தியானது விலகினது. விலகினவுடன் சற்றே தெளிவுண்டாகி மஹாத்தலமெனத் தெரிந்து முத்திதீர்த்தத்தில் ஒருமாதம் ஸ்நானஞ்செய்து பரமசிவன் சந்நிதியிற் சென்று வணங்கித் தரிசனை செய்துகொண்டு அப்பதியில் வசித்தனன். அவனது பாவங்களெல்லாம் விலகிப் பரபசிவனருளினால் சுத்தபவுத்திரனாகித் தனது நகரத்திற்சென்று மறுபடி விவாகஞ்செய்துகொண்டு புத்திரபவுத்திரர்களுடனே சுபகரமாக வாழ்ந்திருந்தனன்.

---

## கிராதன்சரித்திரம்.

அதல்லாமல் கிராதனென்கின்ற வேடனொருவன் மனிதர், பறவை, மிருகம் இவைகளையெல்லாஞ் சற்றேனும் அச்சமின்றிக் கொன்றுதின்றுகொண்டு மகாபாவியாக விருக்கையில் விருத்தப்பருவமடைந்து இருமல், கபம், நடுக்கல் இவைகளெல்லாமிருந்து கூன்வளைந்து சரீரம்புண்களாகித் தடுமாறிக் கோலூன்றிக்கொண்டு எங்கனுந்திரிந்து அந்தியகாலத்தில் ஆலவனமடைந்து சிலநாள் சஞ்சரித்துத் துற்பலத்தினல் ஓர் விருக்ஷநிழலிற் படுத்துக்கொண் டிருக்கும்போது முத்திதீர்த்தத்தில் மூழ்கியோர் கோட்டானனது அவன் உயிர்விடுங் காலத்தி லவ் விருக்ஷத்தின்மேலே வந்தேறிக்கொண்டு சிறகினையுதறியது, அத்துளியானது அக்கிராதன் உடலின்மீது பட்டவுடனே ஞானமுண்டாகிப் பரமசிவனை நினைத்தலால் முத்தியெய்தினன்.

## சோமசுவாமி சரித்திரம்

சுருதிநகரமென்னும் ஓர் நகரத்திலிருக்கின்ற வேதியன் வேதச்சாமியென்பவன், அவனது குமாரன் சோமச்சுவாமியென்னும் பெயரினையுடையவன். அவ்வேதியன் வேதங்கள் அங்கங்கள், சாஸ்திரங்கள், தர்க்கங்கள் வியாகரணங்கள் யாவையுந் தெளிந்தவனாகவும் விபூதிருத்திராக்ஷ சாதன முடையவனாகவும் பரமசிவனுக் கன்பனாகவும் பிரமசாரியனாகவும் ஒழுங்கு வழக்கு தண்டத்துக் குட்பட்டவனாகவும் முருக்கந்தண்டும் முஞ்சியநாணும் சடையமாகத்திரிகாலமும் ஸ்நானஞ்செய்து காலையிலிருந்து உச்சியளவும் பிரமகாயத்திரி யுருப்போட்டு அதன் பின்பு பூசை செய்துகொண்டு வருபவன்.

அப்படி யிருக்குங்காலத்தில் வசந்தகாலம் வந்தது. அவ்வ சந்தகாலததில் சோமசுவாமி யென்பவன் தடாகக்கரையில் காயத்திரிசெயம் செய்துகொண்டிருக்கையில் "ஊழிற் பெருவலியாவுள மற்றொன்று சூழினுந்தான் முந்துறும்" என்றபடி ஊழ்வலியால் ஓர் மதங்கியாகிய நீச்சகன்னிகை சுத்தவபிநய சுந்தரமோகன சந்திரவதன சுகிாதவபிர்தமொழி யுழலும்கயல விழியோடு வரக்கண்டு காமங்கொண்டு மதிமயங்கி "நுண்ணியநூல்பல கற்பினுமற்றுந் தனுண்மையறிவேமிகும்" ஆகலின் செபந்தடுமாறி யவளைப்பார்த்து நீயாரென்று வினவினான். அப்பெண்ணானவள் நானிருக்கின்ற இடம் மதுராபுரி, சாதியிற் புலைச்சி, என்தாய்தந்தையர்க ளிருவருமென்னைக் கலியாணஞ் செய்விக்க வேண்டுமென்று கருதினார்கள். அக்குறிப்பறிந்து சம்மதப்படாம லிப்படிக்கு யாத்திரையாக வந்துவிட்டேனென்று கூறினகாலததில் சோமசுவாமி மிகவுங் காமமீறி யவளை நோக்கினன். அவளும் இசைந்து இஷ்டமாகமருவினாள். இவர்களிருவரும் இப்படிக்கு இருக்குங்காலையில் சோமசுவாமியின் தாய்தந்தையர் சுற்றத்தார்களறிந்து இருவரையும், புறம்பாகத் தள்ளிவிட்டார்கள சோமசுவாமி அம்மதங்கியை அழைத்துக் கொண்டு அவள் தாய்வீட்டுக்குப் போய்ச்சேர்ந்து சிலகாலம், அவர்கள் தொழிலைச் செய்துக்கொண்டு மாமிசாதிகளை விரும்புற்றருந்திக்கொண் டிருக்கையில் ஆண்பிள்ளைகள் பெண்பிள்ளைகளைப்பெற்று ஒன்றுக் கொன்றைக் கலியாணஞ் செய்வித்தனன். அப்பிள்ளைகள் சகோதரிகளைப் புணர்ந்துகொண்டிருந்தார்கள். சோமசுவாமியும் மதங்கியரும் வார்த்திகத்தை யடை

ந்து மெய்தளர்ந்து, கோலூன்றிக் கொண்டு அன்னமில்லாமல் வருந்தினவர்களாக வெங்கெங்குந்திரியுங்காலத்தில் பிராரதது வததால் ஆலவனமடைந்து சிலநாளிருக்குங்காலேயில் அன்ன மில்லாமையினுல் ஒருராத்திரி பட்டினியாகவிருந்து விடியற் காலேயில் மரணமடைந்தனன். அப்போது மஹாபாவியென்று இவனே நரகத்திற் றள்ளுவதற்கு எமதூதர்கள்வந்து பிடித்துக் கொண்டு போகும்போது பரமசிவமானவர் சிவகணங்களேப் பார்த்து நமது தலததில் வசித்தும் முத்திதீர்த்த ஸ்நானஞ்செய்தும் ஒரிராத்திரி விரதமுமிருந்தபடியால் அவனே நமது இடத்திற்கொண்டு வாருங்களென்று கூறிட அப்படிக்கே அச்சோமசுவாமியைச் சிவகணங்கள் சுவாமி சந்நிதியிற் கொணர்ந்து விட்டார்கள், அவனுக்கு மோக்ஷத்தை தக் கொடுத்தனர்.

## நீலிசரித்திரம்.

காஞ்சீபுரத்தி லிருக்கின்ற ஒரு பிராமணன் தனது பெண்சாதியானவள்தன்னேயன்றி வேறேயாருக்கோ கருப்பமாயினுளென்று அவமதிகூர்ந்து தாய்வீட்டிலிருந்து தனது மைத்துனனேயும், பெண்சாதியையு மழைத்துக்கொண்டு தன்னூருக்கு வரும்போது அவளேக் கொல்லவேண்டுமென்று கருதிப் பழைய னூருக்கருகே ஓர் விருக்ஷ நிழலில்வந்து தனது மைத துனனேச் சலத்துக்கு அனுப்பிவிட்டு தனது பெண்சாதி கழுத்திற் சுருக்கிட்டு மடித்துப்போயினுன். சலத்துக்குப்போன அவள் தம்பிவந்து தமக்கையைப்பார்த்து விசனப்பட்டு அவள்மடிந்தவாறே தானு மடிந்தனன். அப்படிக்குக் கொலேசெய்த பிராமணன் இரண்டாவது சென்மம் செட்டியாகப் பிற

ந்து தங்கள் வமிசத்திற் கலியாணஞ் செய்திருந்தனன். அப்
பெண்சாதியானவள் தாயார் வீட்டில் கருப்பமாக விருந்தாள்
அவளை யழைப்பதற்கு மாமன் வீட்டுக்குப்போய் அழைத்
தனன். பிரசவமான பின்பு அனுப்புகிறதாகச் சொல்லினார்
கள். அதைக் கேட்டுக்கொண்டு பழையனூர் வழியாக வருங்
காலையில் முன் சன்மத்திற் பெண்சாதியைக் கொன்ற அத்
தியும், மைத்துனனைக்கொன்ற அத்தியும், இந்தப் பெண்சா
தியைப்போல் கருப்பவடிவமாயும் இம் மைத்துனனைப்போல
வும், உருவமெடுத்துக் கொண்டு வழியிலே வந்திருந்து இச்
செட்டியைக் கண்டவுடன் எங்கள் தாய்தந்தையர் போகவே
ண்டாமென்கிறார்கள் நீர் கோபித்து வந்தீரென்று துணையாக
வென்றம்பியையும் அழைத்துக்கொண்டு யானும் வந்துவிட்
டேனென்று சொல்லச் செட்டியானவன் இதேதோ மாய்கை
யா யிருக்கின்றதென்று மனதிலே யோசித்துககொண்டு நீ
யென் பெண்சாதியல்லவென்றுசொல்லித்தடுத்து நடந்தான்.
அவள் என்னைக் கலியாணஞ்செய்து நான் கருப்பமாயிருக்குங்
காலத்தில் தாய்வீட்டில் என்னைவந்தழைத்து உனக்காகப் பரி
தாபமாய் நான் வந்தா லென்னை அம்பலமாகவிட்டுப் போக
லாமோவென்று விடாம லொருவர்க் கொருவர் தருக்கஞ்
செய்து அச்செட்டியை மடிக்கவேண்டி ஸ்திரீ அத்தியானது
தொடர அச்செட்டியின் கையில் ஒரு சூரியிருந்தமையால் கி
ட்டநெருங்குதற் கச்சத்துடனே தருக்கஞ் செய்துகொண்டு
அந்திநேரத்தில் இம்மூவர்களும் பழையனூர்வந்து தங்கள்
ஞாயத்தை அவ்விடத்திருந்த வேளாளருக்குக் கூறினார்கள்.

அவர்கள் யோசிக்குங்காலையில் ஸ்திரீ அத்தியாகிய பெண்ணை
னவள் யென்புருடனை யான்வசப்படுத்திக்கொள்ளுகிறேன். எ
ன்னையும், அவரையும், ஓர்வீட்டுக்குள்ளேவிட்டு இன்றைய யிரா
த்திரிமட்டுமே அவர்கையிலிருக்கும் கத்தியை வாங்கிக்கொள்ளு
மென்று சொல்லினாள். அவ்வேளாளர்எழுபது பேர்களும் செ
ட்டியைப்பார்த்து அவளும், நீயும் இராத்திரிய தினத்துக்கு
இந்த வீட்டில் கூடியிருங்க ளென்ன, என்னைக் கொல்வதற்கு
இத்தனைப் பிரயத்தினஞ் செய்கிறாள் ஒருக்காலுங் கூடமாட்
டேனென்று சொல்ல அவளால் உன்னுயிர்போனால் அதற்குப்
பிரதியாக நாங்கள் எழுபதுபேருமாய்ந்துவிடுகிறோ மென்று
செட்டியைச் சமாதானப்படுத்திச் செட்டியின் கையிலிருந்த
கத்தியை வாங்கிக்கொண டிருவரையும் வீட்டிலடைத்தார்கள்.
அவளெண்ணியவாறேசெட்டியைக் கிழித்தெரிந்துபோயினாள்.
விடியலில் வேளாளர்கள் யாவர்களுங்கண்டு வருத்தப்பட்டுச்
செட்டிமொழிந்த சத்தியத்தின்படியே அறுபத்தொன்பதுபேர்
மாய்ந்தார்கள். ஒருவன் வயலுழவுக்குப் போயிருந்தவன் இதை
க்கேட்டவுடன் உழுகின்ற கொழுவினாற் குத்திக்கொண்டு மா
ய்ந்தனன். இப்பேர்ப்பட்ட சரித்திரம் பொறுமை-அடக்கம்-
இரக்கம்-ஈகை-நடுநிலைமை-கற்புடைய ஸ்திரீகள்-உத்தமமைந்
தர்கள்-உபசாரவசனம்-யோக்கியதை-சற்குணம்-புகழ் - சீலம்-
ஆசாரம் - சிவபத்தி- உறுதி இவைகளையுடைய வேளாளர்கள்
வாழ்ந்திருக்கும் பழையனூரை நகரமாக உடையது அத்திருவா
லங்காடென்பது.

இத்திருவாலங்காட்டில் விளங்காநின்ற பரமசிவத்தின் திருநாமமானது தேவர்சிங்கவீசன் அம்மன்திருநாமம் - வண்டார் குழலியார். தீர்த்தத்தின் திருநாமம் முத்தித்தீர்த்தம், சென்ருடுந் தீர்த்தமென்று இரண்டு திருநாமம.

திருவாலங்காட்டுப்புராணச்

சரித்திரச்சுருக்க முற்றிற்று.

---

## காரைக்காலம்மையார்சரித்திரம்.

சோழமண்டலத்திலே, காரைக்காலிலே, வைசியர் குலத்திலே, தனதத்தன் என்பவன் ஒருவன் இருந்தான். அவனுக்குப் புனிதவதியார் என்கிற ஒருபுத்திரியார் பிறந்தார். அந்த தனதத்தன் அப்புத்திரியை நாகப்பட்டணத்திலிருந்த நிதிபதி என்பவனுடைய புத்திரனாகிய பரமதத்தனுக்கு விவாகஞ் செய்துகொடுத்து, தனக்கு வேறுபிள்ளையில்லாமையால் தனது மருமகனையும், மகளையும் நாகப்பட்டணத்திற்கு அனுப்பாமல் தன்னுடைய வீட்டினுக்குச்சமீபத்திலேயே யொரு வீடு கட்டுவித்து, அனேகமான திரவியங்களையுங் கொடுத்து அவ்வீட்டிலவர்கள் வாழும்படிசெய்தனன். பரமதத்தன்தனக்குக்கிடைத்த பொருளை விருத்திசெய்து இல்லறத்தினையே நல்லறமாக நடத்திவந்தான் அவன்மனைவியாராகிய புனிதவதியார் சிவபெருமானின் திருவடிகளிலேயே மேலு மேலுமன்புபெருக நாயகன் கட்டளைப்படி நடந்துவந்தார். தம்முடைய வீட்டினை நாடிச்சிவனடியார்கள் யாரரயினும் வரின்

அவர்கட்கன்னம் படைத்து அவர்கட்கு வேண்டிய திரவிய முதலானதும் உதவுவர்.

இந்தப்பிரகாரம் வாழ்ந்துவருங்காலத்தில் ஒரு நாளைய தினம் பரமதத்தனிடத்தில் ஏதோ வாத்தகமூலமாக வந்த வருட் சிலர், அவனுக்கு இரண்டு மாம்பழங்கொடுக்க, அவன் அவைகளைப்பெற்று அவைகளைத் தனது மனைவியாரிடத்தி ற்கு அனுப்பிவிட்டனன். புனிதவதியார் அவைகளை வாங்கி வைத்துக்கொண்டிருக்கையில் ஒரு சிவனடியார் பசியால் மிக வருந்தித் தமது வீட்டிற்குவர அவர் நிலைமையைக்கண்டு உட னே அவருக்கு அமுதுபடைத்து அச்சமயம் பதார்த்தமொ ன்று நேரிடாமையால் தமது நாயகர் அனுப்பிய பழங்களி லொன்றைப்படைத்து அடியாரை அமுது செய்வித்தார். அவ் வடியாரானந்தமாகவுண்டு ஆசீர்வதித்துப்போயினர்.

சற்று நேரந்தாழ்ந்து தனது கணவன் வீட்டிற்கு வந்து போசனம் பண்ணுகையில் மனைவியார் தன்னிடத்தில் மீதி யாக விருந்தமற்றொரு பழத்தைக் கலத்திலே வைத்தார். பர மதத்தன் அந்தப் பழத்தினையுண்டு அது மிகச்சுவையாக விரு க்கக்கண்டு மற்ற மாங்கனி யொன்றினையுங் கொண்டுவந்து வைக்கும்படி கேட்டனன் மனைவியார் கொண்டுவருபவர் போல ஒரு அறையிற்சென்று ஒன்றுந்தோன்றாது சிறிது பிர மித்துத்தெளிந்து ஆபத் சகாயராகிய பெருமானுடைய திரு வடிகளை மனதில் தியானித்தார். அங்ஙனந் தியானித்தவுடன் அப்புனிதவதியார் கரத்திலொரு அற்புதமாங்கனிவந்திருந்தது. அப்பழத்தினையவர் கொண்டுபோய் தனது கணவனார் கலத

தில் படைத்தார். அவன் அதனை உண்டு தேவாமிர்ததத்தின் சுவையினுக்குமதிகமாக விருப்பதைக்கண்டு இது நானனுப்பிய மாங்கனியன்றே? இது தெய்வலோகத்துப் பழம்போலுமிருக்கிறதே இதேதுனக்கு என்றான். மனைவியார் கேட்டுப் பதில் சொல்லமுடியாதவராய் உண்மையினையு மறைக்கக் கூடாதவராய்த் திகைத்து நிகழ்ந்த வண்ணஞ்சொல்லி விடுதலே கடனெனதீர்மானித்து நேர்ந்த வகையினைச் சொல்லி விட்டனர். பரமதத்தன் நம்பாதவனாகி அங்ஙனமாயின் வேறொரு பழத்தினையழைத்துத்தா என்றான். புனிதவதியார் அவ்விடம் விட்டுப்போய் வேறொரு இடத்தில் தனியேயிருந்து சுவாமியைத் தியானித்தமாத்திரத்தில் பழையபடியொரு பழங்கரத்தில் வந்தது அதனைக் கொண்டுவந்து கணவன்கையில் கொடுக்க அவனதைவாங்கிப்பார்த்து ஆச்சரிய முறுகையிலப்பழமறைந்துவிட்டது. அவன் பயந்து மனநடுக்கமுற்று எவ்விதத்திலாவது தனது மனைவியாரை நீங்கிவிடவேண்டுமென்று மனதிற் றீர்மானித்துக்கொண்டு அவரைத் தெய்வமாகப் பாவித்து அக்கருத்தைப் பிறருக்குந் தெரிவிக்காது அவர் தொடர்பின்றி வாழ்த்துவந்தனன்.

அங்ஙனம் வாழுநாளிலே பரமதத்தன் ஒரு மரக்கலம் செய்வித்து தன்றேசத்து அரியபண்டங்களை யதினிறப்பிச் சுபதினத்திலேறித்தானுத் தேசித்த தேயத்தினுக்குச்சென்று அவ்விடத்தில் வாணிபநடத்திப் பல திரவியஞ் சேகரித்துக் கொண்டு பின்னர் அத்தேயத்தினை விட்டு நீங்கிப் பாண்டிமாநகரத்திலுள்ள ஒருநகரத்தினையடைந்து இறங்கி அந்நகரத்தி

ருந்த ஒரு வைசியன் பெண்ணினை விவாகஞ்செய்துகொண்டு பெருஞ்செல்வ வந்தனாய் வாழ்ந்திருந்தனன். அவனுக்கு ஒரு புத்திரி பிறந்தனள். அப்புத்திரிக்குத் தான் தெய்வமாகக்கொண்ட புனிதவதியார்பெயரினையே வைத்தனன்.

பரமதத்தன் பாண்டிநாட்டிலே வாழ, புனிதவதியார் காரைக்காலிலே இல்லறத்தினை வழுவாது நடத்தி வர அவர் சுற்றத்தினர் வர்த்தகத்தின்பொருட்டு வெளிதேயங்களிற் சென்று பரமதத்தனைப் பாண்டிதேயத்திலே யிருப்பதாகத் தெரிந்து சிலரை யனுப்பி உண்மைதேர்ந்து தங்கள் புனிதவதியாரைத் தாங்கள் வலியக்கொண்டுபோய்விடவேண்டுமெனத் தீர்மானித்து அவரையோர் சிவிகையிலேற்றிக்கொண்டுபோய்,பரமதத்தனிருக்கிற நகரத்தினுக்குச்சமீபித்து அவனிடத்திலோராளையனுப்பினார்கள். அவனறிந்து பயந்து தனது இரண்டா மனைவியுடனும் மகளுடனும் வந்து புனிதவதியாரைக் கண்டு அம்மணீ! அடியேன் உம்முடைய கருணையினால் சுகமாகவாழ்ந்து வருகின்றேன். இப்பெண்ணினுக்குத் தங்கள்பெயரையே யிட்டேன். என்று சொல்லி அவருடைய பாதங்களில் விழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான். உடனே புனிவதியார் ஒதுங்கி யொருபுறமாக நிற்க, சுற்றத்தார் பரமதத்தனைநோக்கிநீ உனதுமனைவியாரை வணங்குவானேன்? என்றனர். அவன் நான் இவரிடத்தில் ஓர் பெரிய அற்புதத்தினைக் கண்டேன் ஆகையால் தெய்வமாகக்கொண்டேன். பிரிந்தேன் இங்குவந்து வாழ்ந்தேன். இப்போது கண்டு வணங்கினேன், நீங்

களுந் தொழுங்களென்றனன். சுற்றத்தார்திகைத்துநின்றுர் கள். புனிதவதியார்கணவன் சொல்லியதைக்கேட்டுப் பரமசிவ னைச் சிந்தித்து, சுவாமீ! எனது கணவன் கொள்கையின்படி யானல் இவர்பொருட்டுத் தாங்கிக்கொண்டிருந்த தசையை நீக்கித் தேவரீரையடுத்து நின்று துதிக்கத்தக்க பேய்வடிவினை அடியேனுக்குத் தந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர். ஆக்கணத்திலேயே சுவாமியின் திருவருளினல் மாமிசமுழு வது முதறி என்புடம்பாக மூவுலகமும் வணங்கும்படியான பேய்வடிவமாயினர். தேவர்கள் பூமாரிபொழிந்தனர். ஆகா யத்தில் துந்துமிவாத்திய முழங்கியது. சுற்றத்தார்கள் நமஸ் காரஞ்செய்துகொண்டு தங்களூர் போய்ச்சேர்ந்தனர்.

புனிதவதியார் தமக்குக் கிடைத்த ஞானத்தினல் அற் புதத்திருவந்தாதியும், திருவிரட்டை மணிமாலையும்பாடி, மகா கைலாயத்திற்குச் செல்ல விரும்பி மனத்தினுமதிக வேகமா கச்சென்று வெள்ளியங்கிரியின் சாரலையடைந்து அம்மலை மீது காலாற்செல்லுதல் தகுதி யன்றெனநினைத்து தலையினு லே நடந்துபோனர். அங்ஙன மேறும்பொழுது உமாதேவி யார் கண்டு புனிதவதியாரது அருமையான பத்தியின் பெரு மையினை யெண்ணி ஆச்சரியமடைந்திருக்கையில், புனிதவதி யார் சமீபத்தில் வந்தவுடன் உலகமெல்லா முய்யும்பொருட்டு அவரைநோக்கி அம்மையே! என்று சுவாமி யழைத்தனர். அதுகேட்ட புனிதவதியார் அப்பா! என்று அவர் திருவடி களினமஸ்கரித்து எழுந்தனர். சுவாமி அவரை நோக்கி உனக்

தென்னவரம் வேண்டுமென்றனர். பெருமானே! அடியேனு க்கு இறவாதபேரின்பமாகிய அன்புவேண்டும். இனிப்பிறவா மைவேண்டும், பிறக்கினுந்தேவரீரை யொருக்காலுமறவாமை வேண்டும். இன்னுந்தேவரீர் திருநிருத்தஞ் செய்யுங்காலத் தில் தேவரீரது திருவடியின் கீழே சிவானந்தத்தை உடை யேனாகித் தேவரீரைப் பாடிக்கொண்டிருத்தல் வேண்டும் எ ன்று விண்ணப்பஞ்செய்தார். சுவாமி அவரை நோக்கி நீ தெ ன்றிசையிலேயுள்ள திருவாலங்காட்டிலே நமது நடனத்தைத் தரிசித்தும் பேரானந்தத்துடன் நம்மைப் பாடிக்கொண்டுமிரு எனத்திருவாய்மலர்ந்தருளினர். அதுகேட்ட காரைக்காலம்மை யார் பெருமானைவணங்கி அனுமதிபெற்றுத் திருவாலங்காட் டினுக்குத் தலையினாலடந்து போய்த்திரு நடனத்தைத்தரிசி த்து "கொங்கைதிரங்கி" என்னு மூத்ததிருப்பதிகத்தையும், "எட்டியிலவமீகை" என்னும் திருப்பதிகத்தையும் பாடினார். அவர் சுவாமியினது தூக்கிய திருவடியின் கீழேசிவானந்த த்தை அனுபவித்துக்கொண்டு எக்காலமு இருக்கின்றார்.

## காரைக்காலம்மையார்

சரித்திரமுற்றிற்று

---

அம்மையார் திருநட்சத்திரம்

பங்குனிமீ சுவாதி.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



# காரைக்காலம்மையா ரருளிச்செய்த

## திருவாலங்காடு

# மூத்த திருப்பதிகம்.



பண் - நட்டபாடை.



திருச்சிற்றம்பலம்.

கொங்கை திரங்கிநரம்பெழுந்துகுண்டு கண்வெண்பற்குழிவயிற்றுப், பங்கிசிவந்திருபற்கணீண்டுபரடுயர் நீள்கணைக்காலோர்பெண்பேய், தங்கியலறியுலறுகாட்டிற்றாழ்சடையெட்டுத்திசையும்வீசி, யங்கங்குளிர்ந்தனலாடுமெங்களப்பனிடந் திருவாலங்காடே. (க)

கள்ளிக்கவட்டிடைக் காலை நீட்டிக்கடைக்கொள்ளிவாங்கிமசித்துமையை, விள்ளவெழுதிவெடுவெடென்னநக்குவெருண்டுவிலங்குகாட்டிற் றுள்ளித்துடித்துச்சுடுபிணத்தீச்சுட்டிடமுற்றுஞ்சுளிந்துபூழ்தி, யள்ளியவிக்கநின்றாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே. (உ)

வாகைவிரிந்து வெண்ணெற்றொலிப்பமயங்கிருள்கூர்நடுநாளையாங்கே, கூகையோடாண்டலைபாடவாந்தைகோடதன்

மேற்குதித்தோடவீசி, யீகைபடர்தொடர்கள்ளிநீழலீமமிடுசுடு காட்டகத்தே, யாகங்குளிர்ந்தனலாடுமெங்களப்பனிடந்திரு வாலங்காடே. (௩)

குண்டிலோமக்குழிச்சோற்றை வாங்கிக்குறுநரிதின்னவ தனைமுன்னே, கண்டு லோமென்று கனன்றுபேய்கள்கையடித் தோடிடுங்காடரங்கா, மண்டலநின்றங்குளாலமிட்டுமட்டித்து வீசியெடுத்தபாத, மண்டமுறநிமிர்ந்தாடுமெங்களப்பனிடந்தி ருவாலங்காடே. (௪)

விழுதுநிணத்தைவிழுங்கவிட்டு வெண்டலைமாலைவிரவிப் பூட்டிக், கழுதுதன் பிள்ளையைக் காளியென்று பேரிட்டுச்சீரு டைத்தாய் வளர்த்துப், புழுதிதுடைத்து முலைகொடுத்துப் போயினதாயைவரவுகாணா, தழுதுறங்கும்புறங்காட்டிலாடுமப் பனிடந் திருவாலங்காடே. (௫)

சுழலுமழல்விழிக்கொள்ளிவாய்ப்பேய்சூழ்ந்துதுணங்கை யிட்டோடியாடித், தழலுளெரியும்பிணத்தைவாங்கித்தான்றடி த்தின்றணங்காடுகாட்டிற், கழலொலி யோசைச்சிலம்பொலிப் பக்காலுயர் வட்டணையிட்டு நட்ட, மழலுமிழ்ந்தோரிகதிக்க வாடுமப்பனிடந்திருவாலங்காடே. (௬)

பட்டடிநெட்டுகிர்ப்பாறுகாற்பேய் பருந்தோடு கூகைபக ண்டை யாந்தை, குட்டியிட முட்டை கூகைபேய்கள்குறுநரி சென்றணங்காடுகாட்டிற், பிட்டடித்துப்புறங்காட்டிலிட்டபி

ணத்திளைப் பேரப்புரட்டியாங்கே, யட்டமேபாய நின்றுடுமெ
ங்களப்பனிடந்திருவாலங்காடே. (எ)

நாடுநகருந்திரிந்துசென்றுநன்னெறிநாடிநயந்தவரை, மூ
டிமுதுபிணத்திட்டமாடே முன்னிய பேய்க்கணஞ்சூழச்சூழக்
காடுங்கடலுமலையுமண்ணும் விண்ணுஞ்சுழலவனல்கையேந்தி
யாடுமரவப்புயங்கனெங்களப்பனிடந்திருவாலங்காடே. (அ)

துத்தங்கைக்கிளைவிளரிதாரமுழை யிளியோசைபண்கெ
ழுமப்பாடிச், சச்சரிகொக்கரைதக்கையோடு தகுணிதந்துந்து
மிதாளம்வீணை, மத்தளங்கரடிகைவன் கைமென்றோற்றமருக
ங்குடமுழாமொந்தைவாசித்,தத்தனைவிரவினோடாடு மெங்கள
ப்பனிடந்திருவாலங்காடே. (கூ)

புந்திகலங்கி மதிமயங்கியிறந்தவரைப் புறங்காட்டிலிட்டு
ச், சந்தியில்வைத்துக்கடமைசெய்துதக்கவரிட்டசெந்தீவிளக்
கா, முந்தியமரர்முழவினோசைதிசைகதுவச்சிலம்பார்க்கவார்க்
க, வந்தியின்மாநடமாடுமெங்களப்பனிடந்திருவாலங்காடே.

ஒப்பிணையில்லவன்பேய்கள் கூடியொன்றினையொன்றடி
த்தொக்கலித்துப், பப்பிணையிட்டுப்பகண்டைபாடப்பாடிருந்த
ந்நரியாழமைப்ப, வப்பனையணிதிருவாலங்காட்டுளடிகளைச்செ
டிதலைக்காரைக்காற்பேய், செப்பியசெந்தமிழ்பத்தும் வல்லார்
சிவகதிசேர்ந்தின்பமெய்துவாரே. (யக)

திருச்சிற்றம்பலம்.

உ

# காரைக்காலம்மையார்

அருளிச்செய்த

## மூத்ததிருப்பதிகம்.

பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

எட்டியிலவமீகைசூரை காரைபடர்ந்தெங்குஞ்
சுட்டசுடலைசூழ்ந்தகள்ளி சோர்ந்தகுடர்கவ்வப்
பட்டபிணங்கள்பரந்தகாட்டிற்பறைபோல்விழிகட்பேய்
கொட்டமுழவங்கூளிபாடக்குழகனாடுமே. (௧)

நிணந்தானுருகிநிலந்தானனைப்பநெடும்பற்குழிகட்பேய்
துணங்கையெறிந்துசூழநோக்கிச் சுடலைகவித்தெங்குங்
கணங்கள்கூடிப்பிணங்கண்மாந்திக்களித்தமனத்தவா
யணங்குகாட்டிலனல்கையேந்தியழகனாடுமே. (௨)

புட்கள்பொதுத்தபுலால்வெண்டலையைப் புறமேநரிகவ்வ
வட்கென்றழைப்பவாந்தை வீசவருகேசிறுகூகை
யுட்கவிழிக்கவூமன்வெருட்ட வோரிசதித்தெங்குங்
பிட்கநட்டம்பேணுமிறைவன் பெயரும்பெருங்காடே. (௩)

முள்ளிதீந்துமுளரிகருகி மூளைசொரிந்துக்குக்
கள்ளிவற்றிவெள்ளில்பிறங்குகடுவெங்காட்டுள்ளே ப்
புள்ளியுழைமான்றோலொன்றுடுத்துப்புலித்தோல்பியற்கிட்டு
பள்ளியிடமுமதுவேயாகப் பரமனாடுமே. (௪)

செத்தபிணத்தைத்தெளியா தொருபேய்சென்றுவிரல்சுட்டிக்
கத்தியுறுமிக்கனல்விட்டெரிந்து கடக்கப்பாய்ந்துபோய்ப்
பத்தல்வயிற்றைப்பதைக்கமோதிப் பலபேயிரிந்தோடப்
பித்தவேடங்கொண்டு நட்டம்பெருமானாடுமே. (ரு)

வாளைக்கிளரவளைவாளெயிற்று வண்ணச்சிறுகூகை
மூளைத்தலையும்பிணமும்விழுங்கிமுரலுமுதுகாட்டிற்
றாழிப்பனையினிலைபோன்மயிர்கட்டழல்வாயழல்கட்பேய்
கூளிக்கணங்கள்குழலோடி யம்பக்குழகனாடுமே. (சா)

நொந்திக்கிடந்தசுடலைதடவி நுகரும்புழுக்கின்றிச்
சிந்தித்திரிந்தங்குறங்குஞ்சிறுபேய்சிரமப்படுகாட்டின்
முந்தியமரர்முழவினோசை முறைமைவழுவாமே
யந்திநிருத்தமனல் கையேந்தியழகனாடுமே. (எ)

வேய்களோங்கிவெண்முத்துதிரும் வெடிகொள்சுடலையு
ளோயுமுருவிலுலறுகூந்தலலறுபகுவாய்ப்
பேய்கள்கூடிப்பிணங்கண்மாந்தி யணங்குபெருங்காட்டின்
மாயனோடமலையான் மகளுமருண்டுநோக்குமே. (அ)

கடுவனுகளுங்கழைசூழ்பொதும்பிற்கழுகும்பேயுமா
யிடுவெண்டலையுமீமப்புகையுமெழுந்தபெருங்காட்டிற் ப்
கொடுவெண்மழுவும்பிறையுந்ததும்பக்கொள்ளென்றிசைபாட
படுவெண்டுடியும்பறையுங்கறங்கப்பரமனாடுமே. (கூ)

குண்டைவயிற்றுக்குறியசிறியநெடியபிறங்கற்பே
யிண்டுபடர்ந்தவிருள்சூழ்மயானத்தெரிவாயெயிற்றுப்பேய்
குண்டுகுழவித்தழுவவெருட்டிக் கொள்ளென்றிசைபாட
மிண்டிமிளிர்ந்தசடைகடாழவிமலனாடுமே. (ம)

ஏடுமதியஞ்சடைமேலுடையார்சுழல்வார்திருநட்ட
மாடுமரவமரையிலார்த்தவடிகளருளாலே
காடுமலிந்தகனல்வாயெயிற்றுககாரைக்காற்பேய்தன்
பாடல்பத்தும்பாடியாடப்பாவநாசமே. (யக)

திருச்சிற்றம்பலம்.

அம்மையாரருளிச்செய்த மூத்ததிருப்பதிகங்கள்
முற்றுப்பெற்றன.

---

திருஞானசம்பந்த சுவாமிகளருளிச்செய்த
திருவாலங்காட்டுத்

# தேவாரப்பதிகம்.

பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

துஞ்சவருவாருந்தொழுவிப்பாரும்வழுவிப்போய்
நெஞ்சம்புகுந்தென்னைநினைவிப்பாருமுனைநட்பாய்
வஞ்சப்படுத்தொருத்திவாணாள்கொள்ளும்வகைகேட்
டஞ்சும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (க)

கேடும்பிறவியுமாக்கினாருங்கேடிலா
வீடுமாநெறிவிளம்பினாரெம்விகிர்தனார்

காடெம்சுடலையுங்கைக்கொண்டெல்லிற்கணப்பேயோ
டாடும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (௨)

கந்தங்கமழ்கொன்றைக்கண்ணிசூடிக்கனலாடி
வெந்தபொடிநீற்றைவிளங்கப்பூசும்விகிர்தனார்
கொந்தண்பொழிற்சோலையரவின்றோன்றிக்கோடல்பூத்
தந்தண்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (௩)

பாலவெண்மதிசென்னிபடரச்சூடிப்பழியோராக்
காலனுயிர்செற்றகாலனாயகருத்தனார்
கோலம்பொழிற்சோலைப்பெடையோடாடிமடமஞ்ஞை
யாலும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (௪)

ஆர்க்கும்புனல்சூடியிளவெண்டிங்கண்முதிரவே
பார்க்குமரவம்பூண்டாடிவேடம்பயின்றாருங்
கார்க்கொள்கொடிமுல்லை குருந்தமேறிக்கருந்தேன்மொய்த்
தார்க்கும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (௫)

பறையுஞ்சிறுகுழலும்யாழும்பூதம்பயிற்றவே
மறையும்பலபாடிமயானத்துறையுமைந்தனார்
பிறையும்பெரும்புனல்சேர்சடையினாரும்பெடைவண்
டறையும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (௬)

நுணங்குபறைபாடியாடிவேடம்பயின்றாரு
மிணங்குமலைமகளோடிருகூறொன்றாயிசைந்தாரும்
வணங்குஞ்சிறுத்தொ[illegible]டர்வைகலேத்தும்வாழ்த்துங்கேட்
டணங்கும்ப[illegible]லங்காட்டெம்மடிகளே. (௭)

கணையும்வரிசிலையுமெரியுங்கூடிக்கவர்ந்துண்ண
விணையிலெயில்மூன்றுமெரித்திட்டாரெம்மிறைவனார்
பிணையுஞ்சிறுமறியுங்கலையுமெல்லாங்கங்குஞ்சேர்ந்
தணைவும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (அ)

கவிழமலைதளரக்கடகக்கையாலெடுத்தான்றோள்
பவழநுனைவிரலாற்பையவூன்றிப்பரிந்தாருந்
தவழுங்கொடிமுல்லைபுறவஞ்சேரநறவம்பூத்
தவிழும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (கூ)

பகலுமிரவுஞ்சேர்பண்பினாருநண்போரா
திகலுமிருவர்க்குமெரியாய்த்தோன்றிநிமிர்ந்தாரும்
புகலும்வழிபாடுவல்லார்க்கென்றுந்தீயபோ
யகலும்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (ய)

போழம்பலபேசிப்போதுசாத்தித்திரிவாரும்
வேழம்வருமளவும்வெயிலேதுற்றித்திரிவாருங்
கேழல்வினைபோகக்கேட்பிட பாருங்கேடிலா
வாழ்வர்பழையனூராலங்காட்டெம்மடிகளே. (யக)

சாந்தங்கமழ்மறுகிற்சண்பைஞானசம்பந்த
ஞந்தண்பழையனூராலங்காட்டெம்மடிகளை
வேந்தனருளாலேவிரித்தபாடலிவைவல்லோர்
சேர்ந்தவிடமெல்லாந்தீர்த்தமாகச்சேர்வாரே. (யக)

திருச்சிற்றம்பலம்.

# திருநாவுக்கரசு சுவாமிகளருளிச்செய்த

## திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

வெள்ளநீர்ச்சடையர்போலும்விரும்புவார்க்கெளியர்போலு
முள்ளுளேயுருகிநின்றங்குகப்பவர்க்கன்பர்போலுங்
கள்ளமேவினைகளெல்லாங்கரிசறுத்திடுவர்போலு
மள்ளலம்பழனமேயவாலங்காட்டடிகளாரே. (௧)

செந்தழலுருவர்போலுஞ்சினவிடையுடையர்போலும்
வெந்தவெண்ணீறுகொண்டுமெய்க்கணிந்திடுவர்போலு
மந்தமாம்பொழிற்பழனமல்கியவள்ளல்போலு
மந்தமிலடிகள்போலுமாலங்காட்டடிகளாரே. (௨)

கண்ணினாற்காமவேளைக்கனலெழவிழிப்பர்போலு
மெண்ணிலார்புரங்கள்மூன்றுமெரியுணர்ச்சிரிப்பர்போலும்
பண்ணினார்முழவமோவாப்பைம்பொழிற்பழனமேய
வண்ணலாரெம்மையாளுமாலங்காட்டடிகளாரே. (௩)

காறிடுவிடத்தையுண்டகண்டரொண்டோளர்போலுந்
தூறிடுசுடலைதன்னிற்சுண்ணவெண்ணீற்றர்போலுங்
கூறிடுமுருவர்போலுங்குளிர்பொழிற்பழனமேய
வாறிடுசடையர்போலுமாலங்காட்டடிகளாரே. (௪)

பார்த்தனோடமர்பொருதுபத்திமைகாண்பர்போலுங்
கூர்த்தவாயம்புகோத்துக்குணங்களையறிவர்போலும்
போத்துமோராவநாழியம்பொடுகொடுப்பர்போலும்
தீர்த்தமாம்பழனமேயதிருவாலங்காடனாரே. (௫)

வீட்டினார்சுடுவெண்ணீறுமெய்க்கணிந்திடுவர்போலும்
காட்டினின்றாடல்பேணுங்கருத்தினையுடையர்போலும்
பாட்டினார்முழவமோவாப்பைம்பொழிற்பழனைமேயா
ராட்டினாரரவந்தன்னையாலங்காட்டடிகளாரே. (சு)

தாளுடைச்செங்கமலத்தடங்கொள்சேவடியர்போலும்
நாளுடைக்காலன்வீழவுதைசெய்தநம்பர்போலுங்
கோளுடைப்பிறவிதீர்ப்பார்குளிர்பொழிற்பழனைமேய
வாளுடையண்ணல்போலுமாலங்காட்டடிகளாரே. (எ)

கூடினாருமைதன்னோடேகுறிப்புடைவேடங்கொண்டு
சூடினார்கங்கையானைச்சுவறிடுசடையர்போலும்
பாடினார்சாமவேதம்பைம்பொழிற்பழனைமேயா
ராடினார்காளிகாணவாலங்காட்டடிகளாரே. (அ)

வெற்றரைச்சமணரோடுவிலையுடைக்கூறைபோர்க்கு
மொற்றரைச்சொற்கள்கொள்ளார்குணங்களையுகப்பர்போலும்
பெற்றமேயுகந்தங்கேறும்பெருமையையுடையர்போலு
மற்றங்களறிவர்போலுமாலங்காட்டடிகளாரே. (கூ)

மத்தனாய்மலையெடுத்தவரக்கனைகரத்தோடொல்க
வொத்தினார்திருவிரலாலூன்றியிட்டருள்வர்போலும்
பத்தர்தம்பாவந்தீர்க்கும்பைம்பொழிற்பழனைமேய
வத்தனார்நம்மையாள்வாராலங்காட்டடிகளாரே. (ய)

திருச்சிற்றம்பலம்.

# திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

ஒன்றாயுலகனைத்துமானார்தாமே ஊழிதோறூழியுயர்ந்தார்
தாமே, நின்றாகியெங்குநிறைந்தார்தாமே நீர்வளிதீயாகாசமா
னார்தாமே, கொன்றாடுங் கூற்றையுதைத்தார்தாமே கோலப்ப
ழனையுடையார்தாமே, சென்றாடுந்தீர்த்தங்களானார்தாமே திரு
வாலங் காடுறையுஞ் செல்வர்தாமே. (க)

மலைமகளைப்பாக மமர்ந்தார்தாமே வானோர்வணங்கப்படு
வார்தாமே, சலமகளைச்செஞ்சடைமேல் வைத்தார்தாமே சர
ணென்றிருப்பார்கட்கன்பர்தாமே, பலபலவும்வேடங்களானார்
தாமே பழனைப்பதியாவுடையார்தாமே, சிலைமலையா மூவெயி
லுமட்டார்தாமே திருவாலங்காடுறையுஞ்செல்வர்தாமே. (உ)

ஆவுற்றவைந்துமுகந்தார்தாமே யளவில்பெருமை யுடை
யார்தாமே, பூவுற்றநாற்றமாய்நின்றார்தாமே புனிதப்பொருளா
கிநின்றார்தாமே, பாவுற்றபாடலுகப்பார்தாமே பழனைப்பதியா
வுடையார்தாமே, தேவுற்றடி பரவநின்றார்தாமே திருவாலங்
காட்டுறையுஞ் செல்வர்தாமே. (௩)

நாறும்பூங்கொன்றை முடியார்தாமே நான்மறையோடா
றங்கஞ்சொன்னார்தாமே, மாறிலாமேனியுடையார்தாமே மாம
தியஞ்சடைமேல்வைத்தார்தாமே,பாறினார்வெண்டலையிலுண்
டார்தாமேபழனைப்பதியாவுடையார்தாமே, தேறினார்சித்தத்தி
ருந்தார்தாமே திருவாலங்காட்டுறையுஞ்செலவர்தாமே. (ச)

அல்லும்பகலுமாய் நின்றார்தாமே யந்தியுஞ்சந்தியுமானார் தாமே, சொல்லும்பொருளெலாமானார்தாமேதோத்திரமுஞ்சாத்திரமுமானார்தாமே, பல்லுரைக்கும்பாவெலாமானார்தாமேபழனைப்பதியாருடையார்தாமே செல்லுநெறிகாட்ட வல்லார்தாமே திருவாலங்காடுறையுஞ்செல்வர்தாமே. (ரு)

தொண்டாய்ப்பணிவார்க் கணியார்தாமே தூநீறணியுஞ் சுவண்டர்தாமே, தண்டாமரையானுமாலுந்தேடத் தழலுருவாயோங்கிநிமிர்ந்தார்தாமே, பண்டாரிசைபாடநின்றார்தாமேபழனைப்பதியாவுடையார்தாமே, திண்டோள்களெட்டுமுடையார் தாமே திருவாலங்காடுறையுஞ் செல்வர்தாமே. (சா)

மையாருங்கண்ட மிடற்றார்தாமேமயானத்திலாடல்மகிழ்ந்தார்தாமே, ஐயாறுமாரூருமானைக்காவு மம்பலமுங்கோயிலாக்கொண்டார்தாமே,பையாடரவமசைத்தார்தாமேபழனைப்பதியாவுடையார்தாமே,செய்யாள்வழிபடவுநின்றார்தாமே திருவாலங்காடுறையுஞ் செல்வர்தாமே. (எ)

விண்முழுது மண்முழுது மானார்தாமே மிக்கோர்களேத்துங்குணத்தார்தாமே, கண்விழியாற் காமனையுங் காய்ந்தார்தாமேகாலங்களூழிகடந்தார்தாமே, பண்ணியலும்பாடலுகப்பார் தாமேபழனைப்பதியாவுடையார்தாமே, திண்மழுவாளேந்துகரத்தார்தாமே திருவாலங்காடுறையுஞ் செல்வர்தாமே. (அ)

காரார்கடனஞ்சமுண்டார்தாமே கயிலைமலையையுடையார்தாமே, யூராவேகம்பமுகந்தார்தாமே யொற்றியூர்பற்றியிருந்தார்தாமே, பாரார்புகழப்படுவார்தாமேபழனைப்பதியாவுடையார்தாமே, தீராதவல்வினைநோய் தீர்ப்பார்தாமேதிருவாலங் காடுறையுஞ் செல்வர்தாமே. (கூ)

மாலைப்பிறைசென்னி வைத்தார்தாமே வண்கயிலைமாம லையைவந்தியாத, நீலக்கடல்சூழிலங்கைக் கோனைநெரியவிர லாலடர்த்தார்தாமே, பாலொத்தமேனிநிறத்தார்தாமே பழனை ப்பதிபாவுடையார்தாமே, சீலந்தாரேத்துந் திறத்தார்தாமே திருவாலங்காடுறையுஞ் செல்வர்தாமே. (ம)

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்திசுவாமிகள் அருளிச்செய்த

பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

முத்தாமுத்திதரவல்லமுகிழ்மென்முலையாளுமைபங்கா
சித்தாசித்தித்திறங்காட்டுஞ்சிவனேதேவர்சிங்கமே
பத்தாபத்தர்பலர்போற்றும்பரமாபழையனூர்மேய
வத்தாவாலங்காடாவுன்னடியார்க்கடியேனாவேனே. (க)

பொய்யேசெய்துபுறம்புறமேதிரிவேன் றன்னைப்போகாமே, மெய்யேவந்திங்கெனையாண்டமெய்யாமெய்யர் மெய்ப்பொரு ளே, பையாடரவமரைக்கசைத்தபரமாபழையனூர்மேய, வை யாவாலங்காடாவுன் னடியார்க்கடியேனாவேனே. (உ)

தூண்டாவிளக்கினற்சோதி தொழுவார்தங்கள்துயர்தீர்ப் பாய்,பூண்டாயெலும்பைப்புரமூன்றும் பொடியாச்செற்றபுண் ணியனே, பாண்டாழ்வினைகளவைதீர்க்கும் பரமாபழையனூர் மேய, வாண்டாவாலங்காடாவுன் னடியார்க்கடியேனாவேனே.

மறிநேரொண்கண்மடநல்லார்வலையிற்பட்டுமதிமயங்கி
யறிவேயழிந்தேனையாநான்மையாகண்டமுடையானே
பறியாவினைகளவைதீர்க்கும்பரமாபழையனூர்மேய
வறிவேயாலங்காடாவுன்னடியார்க்கடியேனாவேனே. (௪)

வேலங்காடுதடங்கண்ணார்வலையுட்பட்டுன்னெறிமறந்து
மாலங்காடிமறந்தொழிந்தேன்மணியேமுத்தேமரகதமே
பாலங்காடிநெய்யாடிபடர்புன்சடையாய்பழையனூ
ராலங்காடாவுன்னுடையவடியார்க்கடியேனாவேனே. (௫)

எண்ணார்தங்களெயிலெய்தவெந்தாயெந்தைபெருமானே
கண்ணாயுலகங்காக்கின்றகருத்தாதிருத்தலாகாதாய்
பண்ணாரிசைகளதுகொண்டுபலருமேத்தும்பழையனூ
ரண்ணாவாலங்காடாவுன்னடியார்க்கடியேனாவேனே. (௬)

வண்டார்குழலியுமைநங்கைபங்காகங்கைமணவாளா
விண்டார்புரங்களெரிசெய்தவிடையாவேதநெறியானே
பண்டாழ்வினைகள்பலதீர்க்கும்பரமாபழையனூர்மேய
வண்டாலாலங்காடாவுன்னடியார்க்கடியேனாவேனே. (௭)

பேழ்வாயரவினணையானும்பெரியமலர்மேலுறைவானுந்
தாழாதுன்றன்சரண்பணியத்தழலாய்நின்றதத்துவனே
பாழாம்வினைகளவைதீர்கும்பரமாபழையனூர்தன்னை
யாள்வாயாலங்காடாவுன்னடியார்க்கடியேனாவேனே. (௮)

எம்மானெந்தைமுத்தப்பனேழ்படிகாலெமையாண்ட
பெம்மானீமப்புறங்காட்டிற்பேயோடாடல்புரிவானே
பன்மாமலர்களவைகொண்டுபலருமேத்தும்பழையனூ
ரம்மாவாலங்காடாவுன்னடியார்க்கடியேனாவேனே. (௯)

பத்தர்சித்தர்பலரேத்தும்பரமன்பழையனூர்மேய
வத்தனாலங்காடன்றனடிமைத்திறமேயன்பாகிச்
சித்தர்சித்தம்வைத்தபுகழ்ச்சிறுவனூரனொண்டமிழ்கள்
பத்தும்பாடியாடுவார்பரமனடியேபணிவாரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

## பட்டணத்துப்பிள்ளையார்.

வீடுநமக்குத் திருவாலங்காடு விமலர்தந்த
வோடுநமக்குண்டு வற்றாதபாத்திர மோங்குசெல்வ
நாடுநமக்குண்டு கேட்டதெல்லாந்தர நன்னெஞ்சமே
யீடுநமக்குச் சொலவே யொருவரு மிங்கில்லையே.

---

## அருணகிரிநாதர் திருவாய்மலர்ந்தருளிய திருப்புகழ்.

வடிவதுநீலங்காட்டி முடிவிடுகாலன்கூட்டி
வரவிடுதூதங்கோட்டி விடுபாச
மகனொடுமாமன்பாட்டி முதலுறவோருங்கேட்டு
ளழிதரமாயந்தீட்டி யுயிர்போலே
படிமிசைநாளுங்காட்டி யுடலுறுநேயபண்டேற்று
பழவினைபாவந்தீர்த்து னடியேனைப்
பரிவொடுநாளும்பார்த்து விரிதமிழாளுங்கூத்தா

பரர்புகழ்பாடின்முட்கொண் டருள்வாயே
முடிமிசைசோமன்சூட்டி வடிவுளவாலங்காட்டில்
முதிர்நடமாடுங்கூத்தர் புதல்வோனே
முருகலர்தாமஞ்சூட்டியொரு தனிவேழங்காக்க
வருதிருமாலுந்தோற்க வசைகூறி
இடியெனமேகங்கூட்டி நெடிதருசூலந்தீட்டி
யெதிர்பொருசூரன்முக்க வரலோடு
மிலகியவேல்கொண்டேற்ற வுடலிருகூறன்றாக்கி
யிமையவரோதந்தீர்த்த பெருமானே.

வேலுமயிலுந்துணை.

---

திருவாலங்காடு

## இரத்தினசபாபதிசுவாமியார்பேரில்

### கீர்த்தனம், இராகம் தோடி.

பல்லவி.

கண்டேன் கண் டேனே பிரம்மானந்தங்
கொண்டேன கொண்டேனே.

அநுபல்லவி.

அண்டர்புகழ்திரு ஆலவனந்தனில்
அண்டமுறநிமிர்ந் தாடியபாததைக்

சரணங்கள்.

நாரதர்தும்புரு நலலிசையாய்ப் பாட
நாரணன் ஆரணன் மத்தளதாளம் போட
சீர்பெரும் அண்டர்கள் சித்தர்கணங்கள் நாட
தீவினையான்செய்த பாவமனைத்து மோட (கண்)

முஞ்சிகேசமுனிவர் மனதானந்தம் பெருக்க
முதிருங்கார்கோட ருள்ளந்தனில்மெய்யும் பெருக்க
வஞ்சகமாங்காளி நடனதநிறைற் செருக்க
வஞ்சிவண்டார்குழலி மங்கையரு கிருக்க (கண்)

வானுலகந்தனிலிடதுபாதந் தூக்க
வளருமதனைப்பாத துதியுமனைத்துங் காக்க
ஞானிகளுள்ளந்தோறும் சிவஞானங்களுண் டாக்க
சிந்திக்குந்தொண்டரைத் தந்தையைப்போல் நோக்க (கண்)

---

## வீரமாகாளியம்மைபேரில் கீர்த்தனம்.

இராகம், புன்னாகவராளி

பல்லவி.

தாயேகிருபைசெய்தருளம்மா - இத்தருணந்தனில்
தாயேகிருபைசெய்தருளம்மா.

அனுபல்லவி.

தூயபராபரநிமல ஞானந்தன்
சுதந்தன்சதாசிவ நிதநியசுகா நந்தன்
வேயின்முளைத்திடு முத்தன்வடா ரண்ணியன்
வேந்தன்வண்டார்குழல் காந்தனெதிர் நின்று
விதவிதம்முள சதிகழகந்திகழ்
நடனமென்றிடு திட்முயன்றிடு (தாயே)

சரணங்கள்.

சூலாயுதம் ஏந்துங் காரணி-அவுணர்மாயச்
சுரருக்காவிதருமுத் தாரணி
மாயன்பிரமன் மகபதிசன்றொடு
வானவர்போற்றிடும் ஞானிகளேத்திடும்
காயழலென்னுமஞ் சடையசைந்தாடக்
கைத்தலமொத்துடன் சத்தியுமாடக்
சுடிகலன்சலி முடிகளஞ்சலி
சரணமென்றிட வரமளித்திட (தாயே)
நின்றன்பாதம் மவரிடம் பணிந்தேன் - என்றுன்பமனைத்தும்
அன்றுதானே மனத்திடைத்தணிந்தேன்
நன்றுசெய்திடுந் தீதுசெய்திடும்
நன்மையதாய்க்கொண்டு துன்மையைநீக்கிடும்
மண்டன்மாமலர் மாலையைச்சூடிய
மாதங்கிசாமுண்டி ஆதாரம்செய்தருள்
மகிதலத்திடை யுனைவகித்திடு
தமைநினைப்பவர் தமையளித்திடு (தாயே)

 வீரமாகாளியம்மைபேரில் கீர்த்தனம்.

வாள்கேடகமேந்திய வீரி - இரத்தவிசனன்
மதுமாமிசம்புசித்தருள் கோரி
ஆருஞ்சரணை துன்றியவிதத்து
ஆருண்டெனக்கென்ன அம்பாள்பராசத்தி
கோளும்பகையும் வறுமையும்போக்கிய
கோகனகத்தாளாய் மாற்றியடியேற்குக்
குணமளித்திடு பயந்தவிர்த்திடு
உருகிமிக்குயிர் அதிக வித்திடு (தாயே)

---

## விளம்பரம்.

சிவமயம்

## காரைக்காலம்மையார்

# ஆலயமும் மடாலயமும்.

திருவாலங்காட்டினில் அறுபான் மும்மை நாயன்மார்களிலொருவராகிய காரைக்காலம்மையாருக்கு ஓர் ஆலயமும் மடாலயமும் பண்டையகாலந்தொட்டுண்டு. அவற்றினைப் பரிபாலனஞ் செய்வாரின்றி நாளுக்குநாள் சீரணப்பட்டு இன்னுஞ் சிறிது காலத்தில் அவையிருந்த விடமுமில்லையெனு நிலைமையில் வந்துவிடும் போலுமிருந்ததலினால் அவற்றினைப்புதுப்பித்துத் தருமபரிபாலனஞ் செயதுவர வெண்ணி வேண்டிய முயற்சி செய்து வருகின்றனன். புண்ணியவான்கள் இத்தகைய சீர்ணோத்தாரணத்திற்கும், நைமித்திய குருபூசைக்கும் தங்களால் இயன்றவுதவி புரிவீர்களெனத் திருவருளைச் சிந்திக்கின்றனன்.

திருவாலங்காடு

காரைக்காலம்மையார்மடம்,

சபாபதிதம்பிரான்.